REG. NO. M. 940.

சிவமயம்.
வேலும்மயிலுந்துணை.

"VYSIAMITRAN"
Karaikudi.

சந்தா விபரம்.
வருடம் 1-க்கு ... ... ரூ. 5—0—0
மாதம் 6-க்கு ... ... ரூ. 2—12—0
ஈழம், சிங்கப்பூர், கேட்டால் சைகோன் முதலான வெளியூர்களுக்கு வருடம் 1-க்கு ரூ. 6—0—0
(தபால்கூலியுட்பட)

விளம்பர விகிதம்.
பத்தி 1-க்கு மாதம் 1-க்கு ரூபாய் 25-0-0.
நீண்டகாலம் விளம்பரம் செய்வோர்கள் எழுதிக் குறைத்துக் கொள்ளலாம். சில்லரை விளம்பரங்களுக்கு தடவைக்கு வரி 1-க்கு அணா 4.

# வைசியமித்திரன்

பிரதிசோமவாரமும் பிரசுரிக்கப்பெறும்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு."

பு. 10. காரைக்குடி ரௌத்திரிஸு புரட்டாசிமீ 19உ திங்கட்கிழமை 1920ஸு அக்டோபர்மீ 4உ. இ. 39.

## பொது வியாஸம்.

### இந்தியாவின் புராதன நாகரிகம்.

(மூன் மித்திரன் தொடர்ச்சி.)

கிறிஸ்துவுக்கு 3000 வருஷங்களுக்கு முன்னமே இந்தியா செல்வம் படைத்த தேசமாக இருந்திருக்கிறது. மேல் நாடுகளில் பெரும்பான்மையாக நிலக்கரியும் இரும்பும் தான் அதிகம். நம்நாட்டிலோ இயற்கையான விளைபொருள்கள் அபரிமிதம். ஆகையால் தொழிலுக்கவசியமான சரக்குகள் ஏராளம். நமது ஜனங்கள் அப்பொழுது காட்டுமிராண்டிகளாக இல்லை. சுறுசுறுப்புடன் நல்லஉழைக்கக்கூடியவர்களா யிருந்தார்கள். ஆயினும் ராஜாங்கத்தார் மூலதனம் கொடுத்துதவுவது போதாமையாலேயே நம்மவர்கள் ஏழ்மைப்பட்டவர்களாயிருக்கிறார்கள். உதாரணமாக முன்னாளில் பாபிலோன் வரைக்கும் இந்தியக்கப்பல் சரக்குகள் வெளியேறிப் போன காரணமென்ன? தற்காலத்திற் போகாத காரணமென்ன? முன்னாளில் ஈஜிப்டு தேசத்து பிரதேசங்களுக்கு இந்து மஸ்லின்கள் போயிருப்பானேன்? தற்காலத்தில் நந்தேசத்தினர்க்கே உடுக்கத்துணியில்லாமல் யாவும் எல்லாவற்றையும் அந்நிய நாட்டுக்கனுப்புவானேன்? முன்னாளில் பத்து வருஷக்கணக்கான பலன்களைச் சந்தோஷமாய் நம் மன்னர்க்கு வரி கொடுத்த காரணமென்ன? இப்போது வரிகொடுக்க மாட்டாமையால் அதிகாரி வர்க்கத்துடன் ஸாத்விக எதிர்ப்பையுமகைக்கொண்டு போராடக்காரணமென்ன? இந்தியாவின் முந்கால ஐசுவரியமும் தற்கால தரித்திரமுமேதான். முன்னாளில் பிராமணருக்கு ஆயிரக்கணக்கான பசுக்களை தானம் செய்து அவர்கள் படிக்கணக்கான நெய்யை அக்கினியில் ஊற்றித் தாமும் சாப்பிட்டு வந்தனர். ஜனசமூகமும் தற்காலத்தில் பொதுவே செழித்திருந்தது அன்ன சத்திரிக்கு இரண்டு பொட்டுகூட சுத்தப் பசுநெய் கிடைக்கிறதில்லை. நமது குழந்தைகளின் வாயும்வயிறும் எப்பொழுதும் புண்ணாக உலர்திருக்கிறதே யொழிய வேறல்ல. இதன் காரணமென்ன? இந்தியாவின் முற்காலச் சிறப்பும் தற்காலச் சீர்கேடுமோம்.

முற்காலத்தில் நம்மவர்கள் தமது இஷ்டத்தை எவ்வளவு தூரம் நிறைவேற்றி வந்தார்கள். அவர்களுடைய சுக சௌக்கியங்களுக்கு அவகாசம் முற்காலத்தில் அதிகமா? தற்காலத்தில் அதிகமா? நமது முன்னோர்கள் சுகமெனக் கருதிவந்த விஷயங்கள் எவை? ஆசப் பலவிதமாய் நாம் ஆராயவேண்டும். எல்லோரும் நமது இஷ்டம் நிறைவேற வேண்டுமென்றே கருதுகிறார்கள். தமக்கு இஷ்டமில்லாததை ஒழிக்கவிரும்புகிறார்கள். எந்த மனிதனும் சிறிதளவான சுகத்தை யநுபவிக்க வேண்டுமானுல் போதுமான காவகாசம் வேண்டும். எப்போதும் அவசரப்பட்டுக் கொண்டே இருப்பவர்க்கு ஆனந்தமேது? பொருட்செல்வமுள்ளவர்க்குத்தான் சுகமநுபவிக்க அவகாசம் உண்டு.

> "நலனுறு குமரர் யார்க்கு
> நண்ணிய விருந்தோ டுண்டும்
> பலகலை கேள்வி யாய்ந்தும்
> பகற் பொழுதினிது நீக்கும்
> அலர் முலைபக நலார்த
> மலத்தக மலர்த்தா ணிவிப்
> புலவிக ளூர்த்துஞ்சேர்த்து
> கள்ளிருட் பொழுதும்போமால்"

என்று நைடதத்திற் கூறியுள்ளபடி எல்லோரும் கல்வி கேள்விகளைச் செய்து களிக்கவும் விருந்தோடுண்ணவும் தமது சொந்த நாயகிகளுடன் கொஞ்சிக் குலாவிச் சுகிக்கவும் வேண்டுமானுல் 'இல்லை' யென்ற கவலை ஒருவருக்கும் உதவாது.

எத்தேசமும் ஐசுவர்யம் நிறைந்திருந்தாலல்லாது அத்தேசத்தில் காவியங்களும் நாடகங்களும் ஸங்கீதங்களும் சில்ப சித்திராதி கலை ஞானங்களும் தழைத்தோங்க இடமில்லை. முன்னாட்களிலிருந்த நந்தேசத்து அரசர்களெல்லோரும் நல்ல கவிவாணர்களாகவே இருந்திருக்கின்றனர். ரகுவீர ராம பாண்டியனுடைய "வெற்றிவேற்கையும் நைடதமும்" இன்றும் புகழ்பெற்றுலாவுகின்றன. வடமொழியிலும் போஜன் என்னும் அரசன் ராமாயண சம்பு என்னும் கிரந்தம் இயற்றியிருக்கின்றனர். காளிதாஸன், தண்டி, பாணன், பாசன் முதலிய சம்ஸ்கிருத கவிகளும், கம்பன், புகழேந்தி ஒட்டக்கூத்தர் முதலிய தமிழ்க் கவிச் சக்கிரவர்த்திகளும், நவரசமும் பொருந்திய அழகான பல காவியங்களையும் இயற்றியிருக்கின்றனர். சொற்சுவையும் பொருட்சுவையும் மிகுந்த காவியங்கள் நம் நாட்டில் உள்ளனபோல எந்நாட்டிலும் இல்லையென்னலாம். ரகுவம்சம் குமாரஸம்பவம், மேகதூதம், மாகம், நைஷதம் முதலிய எத்தனையோ காவியங்களும் உள்ளன. மாலவிகாக்நிமித்ரம், சாகுந்தளம் முதலிய அற்புதமான நாடகங்களும் உள்ளன. சாகுந்தலத்திற்கீடான நாடகமொன்றுமேயில்லை. என்று ஜர்மானிய நிபுணர் ஹெட்டே என்பவர் வியந்திருக்கிறார்.

ஸங்கீதம் நம் நாட்டில் அடைந்த பெருமை எந்நாட்டிலும் கிடையாது. முற்காலத்தில் நமது ஸங்கீத வித்வான்கள் அரசர்களிடமிருந்து பெற்ற ஆதரவுகள் தற்காலத்தில் அதிகாரவர்க்கத்தார் நமது வித்வான்களுக்குச் செய்கிறார்களா? தற்காலத்திலெல்லாம் ஸங்கீத வித்வான்கள் தம் சொந்தத் திறமையால் உழைத்து கல்யாண காலங்களிலும், உற்சவ காலங்களிலும் பணக்காரரான பந்துஜனங்களின் ஆதரவின்மேல்தான் ஸன்மானம் பெறுகிறார்கள். சாரங்கதேவர் என்னும் ஓர் ரிஷி ஸங்கீதரத்நாகரம் என்னும் கிரந்தத்தை இயற்றியிருக்கிறார். வீணையினுடைய நயத்தையும் தற்காலத்திலுள்ள ஹார்மோனியத்தின் நயத்தையும் ஒப்பிட்டுப்பாருங்கள் நமது முன்னோர்கள் எக்காரியத்திற்கும் ஸங்கீதத்தை உபயோகியாமலிருந்ததில்லை. ராஜாங்கங்களிலும், கல்யாணங்களுக்கும், ஊர்கோலங்களுக்கும் உபயோகமாயிருந்ததோடு மட்டுமல்லாமல், யுத்தகளத்திலும் சங்கம் கொம்பு எக்காளங்கள் முதலிய வாத்தியங்களையுபயோகித்ததாகத் தெரிகிறது. பகவத்கீதையில் சேனைத்தலைவர்கள், பேரிகை சங்கங்களையுமுபயோகித்ததாகத் தெரிகிறது

சில்பங்களும் சித்ரங்களும் பிரபலமாயிருந்தன. ஹிமாசலம் முதல் கந்யாகுமாரி வரையுள்ள ஹிந்து கோவில்களும் முகம்மதிய தாஜ்மஹால்போன்ற அரண்மனைகளுமே சில்பசாஸ்திரத்தில் நம் முன்னோர்கள் அடைந்திருந்த தேர்ச்சியை நிரூபிக்கின்றன. உத்யானவனங்கள் ஜனங்களுக்கு ஆனந்தகரமாயிருக்கும்படி பாதுகாக்கப்பட்டுவந்தன. இதைத் தவிர க்ஷத்ரியர்கள் வேட்டையாடுவதை உற்ஸாகமாகக் கொண்டார்கள் இந்திரியங்களின் வசப்படுவதே சுகமென்று தற்காலத்தினரைப்போல் நமது முன்னோர்கள் கருதினதாகத் தெரியவில்லை. ஆனால் எல்லோருக்கும் உண்மையில் பிரயோஜனத்தைக் கொடுக்கும் வழியில் உள்ளவைகளை மட்டும் அனுபவித்து வந்தார்கள். உலக சுகம் எதுவும் மட்டுக்கு மிஞ்சினால் நஞ்சாகும். ஆகையால் மிதமிஞ்சாமல் நடுவுநிலைமையினின்றே சுகத்தை யநுபவிக்கும்படியும், அதன்முறைகளையும் காமசாஸ்திரம் விவரிக்கின்றது. காமசாஸ்திரத்தின் சுருக்கு சிற்றின்பங்களையநுபவிப்பதேயாம். ஏனெனில் அநுபவியாமல் அவைகளின் கொடுமை தெரியவாராது. அதைத்தெரியாமல் அதனின்றுவிலகவுமுடியாது. அப்படி யநுபவிப்பதிலும் வரம்புமீறலாகாது. ஸ்ரீ சங்கராசாரியர் சொன்ன பிரகாரம் தனித்தனியே ஓரோர் இந்திரியம்மட்டும்பிரபலயாயுள்ள வண்டுகள், மான்கள், மீன்கள்; யானைகள் விளக்கு பூச்சிகள் இவ்வைந்தும் முறையே மூக்கு, காது, நாக்கு, தொக்கு, கண் ஆகிய இந்திரியங்களை திருப்திசெய்யத்தனிப்பதில் உயிரை இழக்கின்றன.

இவ்வைந்தும் ஒருங்கே பரிபக்குவமாய் அமைந்திருக்கின்ற மனிதன் அவைகளைத் திருப்திசெய்யத்தனிப்பதில் ஜாக்ரதையாயிராமற்போனால் ஆத்மாவை யிழக்கவேண்டி வரும் என்பதில் தடையென்ன?

நமது முன்னோர்களின் நாகரிகம் இதோடு மட்டும் நிற்கவில்லை. ஏனெனில் இவ்வுலக வாழ்க்கையும், இவ்வுலகச் செல்வங்களும் அழியக்கூடியவை. கிலேசமல்லவறியாத ஓர் பேற்றையும் பேரானந்தத்தையும் அடையவேண்டும் எனக் கருதி அம்முறையிற் சென்ற பெரியோர்களான மஹரிஷி பரம்பரையை என்றென்றும் துணையாக்கொண்டு, அவர்களையே சரணாகதியாக அடைந்து தமக்கென்ற என்றையும் நாடாமல், அவர்களுடைய வேலைக்காரனாக இருந்து உலக காரியங்களெல்லாவற்றையும் அழகுறச்செய்து வந்தார்கள். இவில் எவ்வளவு துன்பங்கள் வந்தாலும் எல்லாவற்றையும் பொறுமையுடன் பாராட்டிவந்தார்கள். உலக இன்பங்களுக்காக அவர்கள் முயற்சித்ததே கிடையாது. ஆனால் உலகம் ஒழுங்காய் நடைபெறுவதற்கு ஒரு உற்ற கருவியாய் அமைந்திருக்கிறார்கள். அதிகாரியா யிருக்கிறார்கள். அப்பொழுது எல்லாவிதமான வித்திகளும் உண்டாகின்றன. அஷ்ட ஐசுவர்யங்களும் பெருகுகின்றன. அப்போதும் அவைகளின் சுகத்தில் லவலேசமும் ஆசை வைக்காமல் தான் வீடுபெறவேண்டிய தொன்றையே நினைந்து ஈசுவரனுடைய ஸேவகர்களாகிய மஹரிஷிகளோடு மஹரிஷியாகி உலக காரியங்களெல்லாவற்றையும் பொறுப்பாளியாக மட்டுமே இருந்து இன்னும் உலகிற்குபகரித்து வருகிறார்கள். மோக்ஷமார்க்கத்தை யடைய முயலாதவர்கள் எல்லோரும் அக்ஞானிகள் என்பதே நம் கருத்து. எல்லா உலகங்களும் எல்லா ஜீவர்களும் எதினின்று தோன்றியிருக்கிறதோ அவ்விடம் தான் மோக்ஷம் என்று பெயர். அது மனிதவர்க்கத்தில் தான் கூடும், மனித ஜென்மம் எடுத்ததன் கருத்தே அது தான். அதற்கு கிரமமான படிகளும் அவைகளில் மனிதன் அநுஷ்டிக்கவேண்டியவைகளும்பற்றி மோக்ஷ சாஸ்திரங்கள் ஏராளமாயுள்ளன. உபநிஷத்துக்கள் எல்லாம் இதைப்பற்றியனவேயாம்.

மேற்கூறியவற்றால் இந்தியாவின் புராதன நாகரிகம் முழுவதும் விசாலபுத்தியுடைய மஹா ஞானிகளாலும் மஹாவீரர்களான மந்தாதா முதலிய அரசர்களாலும் அரிய ஸ்திரீ ரத்னங்களாலும், எண்ணிறந்த தேசாபிமானிகளாலும் நந்தேசத்தில் நிலைபெற்று நாளிது வரைக்கும் நீடித்திருப்பதோடுமட்டுமல்லாமல் நாம் ஒவ்வொருவகையிலும் மேல் நாட்டார்களுக்குத் தாழ்ந்தவர்களல்லர் என்று அறியற்பாலது.

பி. எஸ். ராமசுப்பய்யர் சென்னை.

## நீதிக்குறிப்பு.

### திறந்த செவிகள்.

நல்லன தீயன எல்லாவற்றையும் கேட்கவேண்டி இரண்டு செவிகள் அமைக்கப்பட்டுள்ளன. ஆனால் நல்லவை மனதில் பதியட்டும் தீயவை ஒரு காதால் கேட்கப்பட்டு, மறுகாதால் வெளியே செல்லட்டுமென்பதாம் அவற்றைப் படைத்தன் முக்கியக் கருத்து எனக் கூறலாம்.

* *

### பேச்சு சுருங்கினால் காரியம்பலிக்கும்

தொழிலாளி, முதலாளி, அதிகாரி ஆகிய மூவருக்கும் சிறிது வீண் வாய்ப்பேச்சுச் சுருங்கினால் உலகம் நலம் பெறும்.

* *

### இரண்டுகதவு எதற்காக?

சளசளவென்று அதிகமாகப்பேசக் கூடாதென்றே, வாய்க்குஇரண்டு கதவுகளை அமைத்து, அவற்றைச்சமயோசிதம்போல் திறக்கவும், அடைக்கவும் செய்யவேண்டிய அதிகாரத் திறவுகோலை மனத்தினுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றது.

* *

### வேண்டுவதுஇன்பம் வெறுப்பதுதுன்பம்

உலகத்திலுள்ள பிரஜைகள் யாவும் விரும்புவது இன்பம், வெறுப்பது துன்பம். முதலாவது நன்மை நாடி அடைவது தீமைவீடு இதன்காரணம் என்ன? இதனை ஆராயும்பொழுது இதன் காரணம் ஏதேனும்ஒரு அறியாமை நிகழ்ச்சி என்றே முடிவடைய வேண்டியதாகின்றது.

ஏனெனின், ஒவ்வொருவரும் இன்பத்தை விரும்பி, முயற்சி செய்யுமுன் தாம் செய்யப் புகுகின்ற காரியததில் வெற்றிபெறுவதற்குரிய சாதனங்கள், தம்மிடத்தில் அமையப்பெற்றிருக்கின்றனவா என்பதை ஆராய்ச்சி செய்தல் வேண்டும். அவ்வாறு ஆராய்ச்சி செய்தபின், விரும்பிய காரியத்தை முயற்சியோடு நடத்திச்சென்றால் வெற்றிபெறுவது திண்ணம்.

* *

### உதாரணம்.

ஒரு காரியத்தைச் செய்யும்பொழுது காலமானது அதற்கு அனுகூலமாக இருக்கின்றதா? அக்காரியத்தை நிறைவேற்றுவதற்குத் தனது நண்பர்கள் உதவிசெய்யத் தயாராக இருக்கின்றனரா? தேசம் அதற்கு இடங்கொடுக்கின்றதா? ஒருவன் பாரஞ் சுமப்போன், மற்றொருவன் எஜமானன், ஒருவன் தனித்துவாழ்வோன், ஒருவன் குடும்பி, ஒருவன் பணியாளன் ஒருவன் எஜமான் ஒருவன் சுதந்தரன், ஒருவன் பராதீனன் (பிறர் வசப்பட்டு, சுதந்தர மிழந்தோன்) ஒருவன் குரு ஒருவன் மாணவன், ஒருவன் சாதாரண மனிதன் ஒருவன் ஜனசமூகத்தை நடத்தும் தலைவன், ஒருவன் தரித்திரன் ஒருவன் ஸ்ரீமான, ஒருவன் ஆண் தன்மையுடையோன் மற்றொருவன் பெண்தன்மை வாய்ந்தோன்' எனப் பலவகையான நிலையில் வாழ்வோரும், மேற்கூறிய ஆராய்ச்சியினால் மேன்மை பெறுவர்.

* *

### ஒற்றுமை.

ஒற்றுமையால் குடியோங்கும், குலமோங்கும், நாடோங்கும், நிலையோங்கும், கல்வியோங்கும், கலையோங்கும், செல்வமோங்கும் ஆதலால் ஒற்றுமை யொன்றே அவனியெங்கும் வேண்டப்படுகின்றது. ஒற்றுமையை வளர்க்கப் பத்திரிகைகளையே பெருஞ் சாதனமாகக் கருதவேண்டும்.

* *

### மனிதவர்க்கம்

### நன்மைபெற மார்க்கமுண்டா?

ஜனசமூகம் நன்மைபெற வேண்டுமாயின், அரசர்களும் குடிகளும் பரஸ்பர நன்மையில் ஒற்றுமையோடு பாடுபட வேண்டும். ஒற்றுமை நிறைந்தால், ஒரு சமூகத்தார் உலகத்தை யடக்கியாளுவது, மற்றொருவர் நசுக்குண்டு மாளுவது என்ற மிருகநீதி, மானிடவர்க்கத்தைவிட்டகலும் மானிடவர்க்கம் மேன்மைபெறும். அக்காரியமானது வெற்றியாக முடியும்வரை அதற்காகக் கூடியவரவுசெலவுகள் எவ்வளவு? தமது சக்தியும் நிலைமையும் அதற்கு ஈடு கொடுக்க எவ்வளவு தூரம் தயாராக இருக்கின்றது' என்பதைகவனித்தல் வேண்டும். இவைகளைத் தீர ஆலோசித்து, தயார் செய்துகொண்டபின், எந்தக்காரியத்தில் முயன்ற போதிலும் அதில்ஜெயம் பெறுவது திண்ணம் இது ஒரு சிறியகுடும்ப காரியத்திற்கும்ஒரு பெரிய அரசாங்க காரியத்திற்கும் பொருந்துவதாம்

*

### உலகம் பலவிதம்,

உலகத்திலே, சிறுவன் வாலிபன், முதியோன் என வயதால் மூவகைப்பட்ட மனிதரும், பிரம்மசாரி, இல்லறத்தான், வனம் புகுவோன், துறவி என ஆச்சிரமத்தால் நால் வகைப்பட்ட மனிதரும் காணப்படுகின்றனர். இவர்கள் ஒவ்வொருவருக்கும்மேற்கூறிய ஆராய்ச்சி தம் தம் நிலைக்குத் துணைபுரிவதாம்.

## அற்புதப் பூங்கொத்து.

### தங்கச் சுரங்கத்தில்வேலைசெய்யும் இந்திய எறும்புகள்.

இந்தியாவில் தங்கம் ஏராளமாக இருந்ததென்றும், அவை காலஅளவிலே குறைந்துவிட்டன வென்றும் பல சாஸ்திர ஆதாரங்களிருப்பதற்கேற்ப, பூதத்துவ சாஸ்திரியாகிய ராபின்ஸன் என்பவரால் எழுதப்பட்டதோர் புத்தகத்தில் ஆச்சரியமான கதை யொன்று வரையப்பட்டிருக்கின்றது. அதன் சாராம்சம் பின் வருமாறு:—

"பூமியிலிருந்து எடுக்கப்படும் தங்கவகைகளில் பைப்பாலகம்என்று கூறப்படுவதோர் தங்கவகையுண்டு. (அது பிபீலி கைகள் என்று வடமொழியில் வழங்கப்படுகின்ற எறும்புக்கூட்டங்களால் சேகரித்து வைக்கப்படுகின்ற தங்கத்திற்கு ஓர் காரணப் பெயராம்) இது இந்தியாவின்வடமேற்கு மாகாணங்களிலுள்ள பாலைவனங்களில், குள்ள நரியைப்போன்ற பெரிதாயும் விரைந்துசெல்லும் சக்தியுடையதாயும் காணப்படுகின்ற எறும்புக் கூட்டங்களால் பூமியினின்றும் மண்ணுடன் சேர்த்துத் தோண்டிவரப்படுகின்ற தங்கக் கட்டிகளால் சேகரிக்கப்பட்டதாம். அது பார்வைக்குச் சிற்றெறும்புகளின் வடிவத்தைப் போன்றுகாணப்பட்டாலும் அது சுத்தமான தங்கமாயிருக்கும். ஒவ்வொரு இந்தியனும் இரண்டு ஆண் ஒட்டகை, ஒரு பெண் ஒட்டகை, சிலகோணிப்பைகள் இவைகளுடன் காடு சென்று வெயில் சமயத்தில் மேற்படி தங்கமணல்களை வாரிவாரி ஒட்டகங்களின் மீதேற்றிக் கொண்டு வீடு வந்து சேர்வான். அவன் வெயில் குறைவதற்கு முன் வீடு வந்து சேராமல் காட்டில் அகப்பட்டுக்கொண்டால் நடுப்பகல் நேரத்தில் வெயிலுக்குப் பயந்து வளைகளுக்குள்ளிருக்கும் எறும்புகள் தங்களது தங்கங்களைக் கொள்ளை கொள்ளும் திருடர்களை வழிமறித்துக் கொன்று விடுமாம். அவ்விதத் தொல்லை நிகழாதிருக்க வேண்டியே அந்தத் தங்கத் திருடர்கள் பெண் ஒட்டகமொன்றைக் கூட அழைத்துச் செல்கின்றனராம். பெண் ஒட்டகம் கூட வருமாயின், அது பாரஞ்சுமப்பதுடன் "இருள்வருபோகுமுன் வீட்டிற்குச் சென்று தனது குட்டிகளைப் பரிபாலிக்க வேண்டி ஆண் ஒட்டகங்களையும் விரைந்து நடக்கும்படி தூண்டுவதற்கு ஏதுவாகுமென்பதே அவர்களின் தந்திரமாகும். இம்மாதிரி சேகரித்து வைக்கப்பட்ட 10 லக்ஷம் பெறுமான தங்கத்தூளுக்குகளை 'டேரியஸ்' அரசன், கிரேக்க அரசனுக்குக் காணிக்கையாகக்கொடுத்திருக்கிறாராம். வேறொரு பூதத்துவ சாஸ்திரியான புரொபஸர் 'பால்' என்பவர்சிந்துநதிகளிலும் அதன் கிளைகளிலுமுள்ளமணல்களில் அக்காலத்திலே ஏராளமாகத் தங்கம் கிடைத்தன வென்றும், அவை காலக்கிரமத்திலே குறைந்தழிந்தன வென்றும், 1884ல் எழுதியுள்ள "இந்தியன் ஆண்டிகோரி" என்னும் புத்தகத்தில் வரைந்திருக்கின்றார்.

இதனால் இந்தியாவில் முன்னர் ஏராளமான தங்கச் சுரங்கங்கள் இருந்தன வென்றும், அவை இப்பொழுது மிருந்து வருகின்றன வென்றும், ஆனால், காட்டிலேசென்று சுள்ளி ஒடிக்கச் சுதந்தரமின்றிய இந்தியர்களுக்கு அவைபுலப்படுகின்றனவல்ல வென்பது தெளியாரும்.

## விசேஷக்குறிப்புகள்.

### அகவிலை ஆகாயத்தைப்பார்க்கின்றது.

அகவிலை வரவர மிகவிலைபாகி ஆகாயத்தைப்பார்க்கின்றது. 3 மாதத்திற்கு ஓர்முறை சம்பளங்கூடினாலும் திருப்தி வெகு தூரத்திற்கு ஓடி விடுகின்றது. வறுமையால் விசாகின்ற கொடுமை சொல்லித் தொலையா, நன்மை வருங்கால மெப்பொழுதோ?

### ஓர் ஆங்கிலப் பத்திரிகையின் வீண் வேலை.

இந்தியாவுக்கு எலியினால் விளைந்த கஷ்டம்,

இந்தியாவில் எலியினால் ஏற்படும் பெருத்த கஷ்டத்தைப்பற்றி டைம்ஸ் பத்திரிகை வெகு நன்றாய்க் கூறியிருக்கின்றது. இந்தியாவில் சுமார் 80 கோடி எலிகள் இருப்பதாயும், ஒவ்வொரு எலியும் வருடத்திற்கு 6 பவுண்டு தானியம் சாப்பிடுவதாயும், ஆகவே, அதன் ஆகாரச்செலவு வருடம் 1க்கு 15 கோடியாகிறதாகவும் சொல்லப்படுகின்றது. மற்றும் இவைகள் இளந்தேங்காய்களை குடைந்து, அதற்குள்ளிருப்பதை யெல்லாம் தின்றும் கால்குழாய்களில் ஆகாரம் செய்தும் மின்சாரக்கம்பிகளைப் பற்களால் கடித்து அறுத்தும், ஆறுகளினுடைய அணைகளில் சுரங்கஞ் செய்தும், பெருத்த கஷ்டநஷ்டங்களை விளைவிக்கின்றன. இந்த வகையில் எலிகளால் வருடம் 1க்கு 30 கோடி ரூபாய் நஷ்டம் ஏற்படுவதாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றது. சென்ற 20 வருடங்களில் நஷ்டத்தின் மொத்தத் தொகை கணக்கிடப்பட்டிருக்கின்றதாவது:—எலிகளால் ஏற்பட்ட வியாதி, மரணம் முதலியவைகளால் 603 கோடி ரூபாயும், தான்யம் முதலியவைகட்கு 600 கோடி ரூபாயும் எலிகளைக்கொல்லவும் ப்ளேக்கைத் தடுக்கவும் செலவழித்ததில் 39 அரை கோடியும் ஆக மொத்தம், 1,242 அரை கோடி ரூபாய் நஷ்டமேற்பட்டது. பழைய எக்ஸ்சேஞ்சு ரேட்டு விகிதப்படி இந்த நஷ்டம் 828,000,000 பவுனாகிறது. இப்பொழுதுள்ள ரேட்டுப்படிக்கோ 1,242,500,000 பவுனாகிறது. அதாவது சண்டைக்கு முன்னுள்ள இந்தியக் கடனைப்போல, 5 தடவை அதிகமாகிறது. ஒவ்வொரு வருட நஷ்டமும் இந்தியாவின் மொத்த வரும்படியில் 7ல் ஒரு பங்கின் தொகையாகின்றது. இந்த நஷ்டம் ஏழை இந்தியாவுக்கு மிகவும் தாங்க முடியாததேயாகும்."

### மகாத்மாவின் சுற்றுக்கடிதம்.

மகாத்மா காந்தி சட்டசபைக்கு அபேக்ஷகர்களாய் நிற்கின்ற யாவர்க்கும் ஓட்டுக் கொடுக்காமலிருக்கும்படி தாம் ஓட்டர்களைக் கேட்டுக்கொள்வதாக ஒரு சுற்றுக்கடிதம் அனுப்பியிருக்கின்றார்.

### மகாத்மாவை, மகா சபைக்கு சிபார்சு செய்தல்.

அடுத்தநாகபுரி காங்கிரஸ் மகாசபைக்கு அக்கிராஸனாக ஸ்ரீ மகாத்மாவையும், மிஸ்டர் பி சக்கிரவர்த்தி ஸ்ரீ விஜயராகவாசாரியார் அரவிந்த பாபு, மிஸ்டர் ஸ்ரீ வி ஆர் தாஸ் ஆகிய இவர்களையும் நியமிக்கலாமென வங்காள காங்கிரஸ் கமிட்டியார் சிபார்சு செய்திருக்கின்றனர். இவ்வாறே ஒவ்வொரு மாகாணமும் அபிப்பிராயம் தெரிவித்து வருகின்றன. ஆனால் காரியம் அக்டோபர் மாதம் 10ந் தேதி யன்று கூடப்போகின்ற உபசபைக் கமிட்டியின் கூட்டத்தில்தான் அக்ராஸனர் நியமனம் உறுதிப்படுத்தப்படும்.

### மாளவ்யாவிடத்து சில மஹாஜன ஸபையினரின் கோரிக்கை.

கனம் பண்டித மாளவ்யா அவர்கள் தேசிய மகாசபையின் தீர்மானத்தைக் கௌரவிக்கவேண்டி, சட்டசபைக்கு அபேக்ஷகராக நிற்பதினின்றும் விலகிக்கொள்ள வேண்டுமெனச் சில காங்கிரஸ் வாதிகளால் கேட்டுக்கொள்ளப் பட்டிருக்கின்றனராம்.

### பேபர் பாதுஷாவின் அரிய உபதேசம்.

பூனாவில் பிரசுரமாகும் கேசரிப் பத்திரிகையில் பின்வரும் விஷயம் பிரசுரிக்கப் பட்டிருப்பதாய் சமரச போதினி எழுதுகின்றது:—

"பேபர் பாதுஷா அவர்கள் கோவதை (பசுவதை) கூடாதெனத் தமது ராஜ்யத்தில் சட்டஞ் செய்திருந்தார். ஆனால், பசுக்கள் ஒவ்வொரு வீட்டிலும் வைத்து அன்பாக வளர்க்கப்பட வேண்டுமெனப் பகிரங்க உத்தரவு செய்ததன்பேரில் ராஜ்யத்திலுள்ள ஒவ்வொரு குடும்பத்தாரும் ஒவ்வொரு பசுவை வைத்துப் பரிபாலித்து வந்தனரென்றும், அக்காலம் தேசத்தில் தேனும் பாலும் கலந்தோடியதென்றும் சரித்திரக்காரர்கள் கூறுகின்றனர். போபால் பீகம் ராஜ்யத்தின் அரண்மனைப் புத்தகசாலையில் ஓர் அரிய கடிதம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அக்ககம்பிக்கையுள்ள கடிதம் மௌலானா அரிப் உஸ்னே ஹாஸ்மி என்பவரிடமிருக்கிறது. இக்கடிதம் இதுவரையில் ஒருவருக்கும் தெரியாதென்று சொல்லப்படுகின்றது; அக்கடிதம் என்னவென்று ஜனங்கள் வெகு ஆவல் கொள்வார்கள். பேபர் பாதுஷா தம் குமாராகிய ஹுமாயூனுக்குத் தம் கையால் ஓர் அந்தரங்கக்கடிதம் எழுதி, அதில் ராஜ்யம்செழித்திருக்கவும், நீடித்திருக்கவுமான சில வழிகளைக் குறிப்பிட்டிருக்கிறார். அந்தக் கடிதத்தின் அசல் நகல் பின்வருமாறு'—

எனது பிரியமுள்ள குமாரனே! உனக்கு இந்த ராஜ்யத்தை யளித்த கடவுளுக்கு எனது வந்தனம். இந்த இந்திய ராஜாங்கத்தில் பலவிதமான ஜாதி தர்மங்கள் உள்ளன. ஆகலால் நீ சுத்தமான மனத்துடன், உன்னுடைய சுய தர்மத்தையே பாராட்டாமல், எல்லாத் தருமங்களையும் அந்த அந்த ஜாதிதர்மக் கொள்கைகளுக்கு யாதொரு விரோதமுமில்லாமல் நடந்துகொள். இந்துக்கள் மனத்தில் உன் ராஜ்யத்தைப்பற்றி உன் ஆளுகைக்குட்பட்டஎல்லாவிதமான கோயில்களையும், பூஜாஸ்தலங்களையும் காப்பாற்று. அவைகளுக்கு உபத்திரவம் நேராமல் பார்த்துக்கொள். எல்லாவற்றிலும் முக்கியமாக எங்கேனும் பசுவதை ஏற்பட்டால் அதை உடனே நிறுத்திவிடு! நீ பசுக்களை இரக்ஷிக்கின்றவனென்று ஏற்பட்டுவிட்டால் உனக்கும் பிரஜைகளுக்கும் சுகமும் சமாதானமும் உண்டாகும். இதை நீ மனத்தில் நிச்சயம் செய்துகொள். நமது தர்மத்தில் நிற்கவேண்டும் ஒற்றுமையில்லையென்று எதிராளிகள் நினைக்கும்படி நடந்துகொள்ளாதே. உதாரணமாக:—எப்படிச் சரீரத்தில் தத்துவங்கள் நிதானமாகவிருக்கும்போது யாதொரு ரோகம் ஏற்படவில்லையோ? அதுபோல, தேசத்திலுள்ள ஜாதிகள் ஒற்றுமையாகவும் சமாதானமாகவும் வாழ்ந்துவரும்படி ராஜ்யபரிபாலனம் செய்! பேபர்பாதுஷா இக்கடிதத்தினின்றும் பேபர் பாதுஷா பசுக்கொலை கூடாதென்று வற்புறுத்தியிருப்பதும், பசுக்கள் வளர்க்கப்பட வேண்டுமென்று கூறியிருப்பதும், இந்து முஸ்லிம் ஒற்றுமை விருத்திசெய்யப்படுவது அவசியமென்பதும் தெரியவரும்.'

### ஸ்ரீமதி தேவியின் சுற்றுக்கடிதம்

ஸ்ரீமதி சரளாதேவி சௌதராணியார் அவர்கள், தேசிய மகாசபையின் தீர்மானப்படி ஒத்துழையாமை இயக்கத்தை பிரசாரஞ் செய்வதில் யார் யார் ஒத்துழைக்கத் தயாராகவிருக்கின்றனரென்பதைத் தாம் அறியவிரும்புவதாக ஒரு சுற்றுக் கடிதம் வெளியிட்டிருக்கின்றனராம்.

### தண்ணீருக்குள் தந்தி யடித்தல்

தண்ணீருக்குள் கம்பியில்லாத் தந்தி மூலமாகச் செய்திகளை யனுப்ப முடியுமா என்பதைப்பற்றி ஆராய்ச்சி செய்ய லைசென்ஸும், அதற்கு வேண்டிய ஆள்-பண உதவிகளும் கடனாகக்கொடுக்கப்பட வேண்டுமென ராவ் பகதூர் தினர் என்பவர் இந்திய அரசாங்கத்தினரைக் கேட்டுக்கொண்டனர். இந்தியா அரசாங்கத்தார் லைசென்ஸ் மாத்திரம் கொடுத்தனர். ஆனால் ஆட்களும் பணமும் கடனாகக் கொடுக்க மறுத்துவிட்டனர். இந்தியப்பணம் இந்தியர்க்குத் தேவையற்ற பல இனங்களில் செலவிடப்படுவது நியாயமாக இருக்குமானால், இந்தியர்களின் சாஸ்திரியத் தொழில்களின் அபிவிருத்திக்கென வேண்டப்படும் செயல்களுக்கெல்லாம் கவர்ன்மெண்டார் உதவிபுரிய வேண்டியது அவர்களின் முதற்கடமையாகும்.

### மிதவாதிகளின் சந்திப்பு.

பம்பாய் மிதவாத சங்கத்தார், சென்ற வெள்ளிக்கிழமை யன்று பம்பாய் வந்து சேர்ந்த லார்டு சின்ஹாவுக்கு ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்துக் கொடுக்கப்பட்டதாம்.

### "காண்டிகளின் கருத்து"

"காலதேச வர்த்தமானத்தை அனுசரித்துப் போவதுதான் விவேகிகளுக்கு அடையாளம். காலத்தின்போக்கை யாரும் தடுக்கமுடியாது. காலரீதியை யனுசரித்து அவ்வப்பொழுது அபிப்பிராயங்களை மாற்றிக்கொண்டுதான ஆகவேண்டும். இதை யறிந்து நம்மோடுகூடவரு மிதவாதிகளுக்கு இஷ்டமில்லாவிட்டால் அவர்கள் பின்னே வரட்டும். உணர்ச்சியில்லாதவன் மனிதனல்ல"

நான் "தவறுதல் என்பதற்குபமன் என்றுபெயரிடுகின்றேன்"

ஒரு புராதன இந்திய தீர்க்கதரிசி.

### பெரியார் தரிசனம்.

சென்ற செப்டம்பர் 10உ யன்று, கல்கத்தா அமிருதபஜார் பத்திரிகையின் ஆசிரியராகிய பாபு மதிலால் கோஷ் என்ற பெரியாரைத் தரிசிப்பதற்காக ஸ்ரீ மகாத்மா காந்தியும் பாபு கிரிதாலாலும், ஸ்ரீ சரளாதேவியும், ஜாகர்லால் நேருவும் சென்றிருந்தனர். முதலில் ஒவ்வொருவரும் க்ஷேமலாபங்கள் விசாரிக்கப்பட்டு, பின்னர் மகாத்மாவுக்கும் கோஷுக்கும் பல அரிய விஷயங்களைப் பற்றி சம்பாஷிக்கப்பட்டனவாம். முக்கியமாக ஒத்துழையாமையின் அம்சங்களே பேசப்பட்டனவாம். இருவரது சம்பாஷணைகளும் இனிது நடைபெற்றவுடன், மதிலால் கோஷ், மகாத்மாவை மார்பு புறத்தழுவி ஆசீர்வதித்து, "இந்தியச் சிறுவர் ஒவ்வொருவரும் மகாத்மாவின் தன்மையையும் ஒழுக்கத்தையும் பெற முயலவேண்டுமெனக்" கூறினராம்.

### சிறுவர்களின் சரீர பரிசோதனை.

பள்ளிக்கூடங்களில் கல்வி பயிலும் மாணவர்களின் வைத்திய பரிசோதனை சம்பந்தமாய்ப் பயிற்சிபெற்ற 3 அஸிஸ்டெண்டு ஸர்ஜன்களை 2 வருஷத்திற்கு நியமிக்ககவர்ன்மெண்டார் உத்தரவு செய்திருக்கின்றனர். அவர்களுக்கு முறையே சென்னையிலும், ராஜமகேந்திர புரத்திலும் கோயமுத்தூரிலும் தலைமை ஸ்தானங்கள் அமைத்துக் கொடுக்கப்படும். அவர்களுடைய சம்பளத்தைத் தவிர 100 ரூபாய் விசேஷப்படியும் அவர்களுக்குக் கொடுக்கப்படும். பிரத்தியேகமாக வைத்தியம் பார்க்க அவர்களுக்கு உரிமை கிடையாது. சர்க்கார் நடத்தப் பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் ஒவ்வொரு மாணவனிடமிருந்தும் இனி ½ ரூபாய் வாங்கப்படும். மேற்படி ஸர்ஜன்களின் முக்கியமான வேலை சர்க்கார்ப் பள்ளிக்கூடங்களில் மட்டுமன்று, ஏனைய பள்ளிக்கூடங்களின் வைத்திய பரிசோதனையை இன்ஸ்பெக்ஷன் செய்யவும் வேண்டும் எனக் கூறப்படுகின்றது. வயிறு நிறைய உணவின்றி வருந்தும் இந்தியாவில் இவ்விதப் பரிசோதனையினால் அறியவேண்டிய ரகசியங்கள் அதிகமாக இல்லை. ஏனெனின் பசிப்பிணியால் பலகாலும் வாதிக்கப்பட்டு வருகின்ற இந்தியர்களுக்கும் அவர்களது பலஹீன சந்ததியார்க்கும் நோய் மலிவதற்குப்போதிய காரணங்களிருக்கின்றனவேயன்றி அவர்கள் நோயின்றி வாழ்வதற்கு யாதொரு உதவிகளும் போதுமானபடி செய்யப்படவில்லை என்பது வெளிப்படை. ஏனையோர்க்கு எவ்விதமாயினும் இந்திய வாலிபர்களின் சரீர நிலையைப் பொறுத்து இது உண்மைதான் என திருச்சி நாஷனல்கலாசாலை மாணவர்களின் சரீர பரிசோதனை செய்த ஸ்ரீமான் டாக்டர் டி எஸ் எஸ் ராஜன் அவர்கள் நிரூபித்திருக்கின்றனர். மாணவர்களின் சரீரம் ஆரோக்கியம் பெற்று அவர்கள் கல்விச்செல்வப் புகழுடன் வாழவேண்டுமாயின், அவர்களது தற்காலக் கல்விமுறையின் காலதிட்டம், உணவுவகை இடவசதி, பயிற்சிமுறை இவையாவும் திருத்தமாக கவனிக்கப்படவேண்டும். இவைதாம் வாலிபர்களின் பலஹீனம் நோய் வாழ்க்கைக்குமூலகாரணமாகும். நோயின் காரணத்தை வேரோடு கெல்லாது, அதன் மேற்கிளையை மாதநிரம் தொடுவதுபோல் பாவித்தால் பயன் பெறுவது அரிது. இதனை யாவரும் உணர்தல்நலம். மேலும் ஆங்கிலமுறைப்படி, அதிகச் செலவில் இரண்டொரு ஸர்ஜன்களை நியமித்து லக்ஷக்கணக்கான வாலிபர்களின் நாடிக்குறைய அறிய முயல்வதைப் பார்க்கிலும், சொற்பச் செலவுகளில் கிராமந்தோறும் அல்லது தாலூக்காக்கள் தோறும் சிற்சில ஆயுர்வேத தர்மவைத்தியசாலைகளை ஸ்தாபித்துச் சிகிச்சை செய்தல் பெரும்பயனாம்.

### சுதேசிய உடை.

இப்பொழுது புதியவுக்கத்தின் பயனாகவே போலும் சுதேசியத்தொழில்களில் பொது ஜனங்களின் கவனம் விரைந்து செல்ல விரும்புகின்றது. உதாரணமாக:—

இப்பொழுது சுதேசித்துணிகள் ஏராளமாகச் சென்னை மாகாணக்கிலப்பத்து உத்யோகசாலையில் (அதாவது கிர்.S பிராட்வேயில்) வந்திருக்கின்றனவென்றும் அவை வேண்டுவோர் மேற்படி பஞ்சாயத்தின் காரியதரிசிக்கு எழுதிக்கொள்ளலாமென்றும் மிஸ்டர் வி எஸ் வெங்கட்டராமய்யரவர்கள் பத்திரிகைகளில் எழுதியிருக்கின்றனர். பொதுவே, ஜனங்களுக்குள் இப்பொழுது தன்னுணர்ச்சி தோன்றியிருப்பதைக் குறித்து நாம் பெரிதும் மகிழ்ச்சியுறுகின்றோம். ஆனால் சுதேசியம் என்பது உடையில் மாத்திரமன்று. அது நடையிலும் பாவனையிலும் முற்றிப்பழுக்க வேண்டும். இரண்டொருவர் மாத்திரம் தேசிய உடைதரிப்பதால், சுதேசியப் பயிர்செழித்துவிடாது. சுதேசியத்தில் ஆவல்கொண்டவர்களாய்க் காணப்படுகின்ற ஒவ்வொருவரும்-சுதேசியப் பிரசங்கம் புரிகின்ற ஒவ்வொருவரும்-சுதேசியப் பிரசாரஞ் செய்கின்ற தலைவர்கள் ஒவ்வொருவரும் தாம், தேசிய வஸ்துக்களையே உபயோகிப்பது என்ற தீர்க்க விரதத்தைக் கைக்கொள்வதுடன், தமது செல்வாக்கினால் ஒவ்வொரு இடங்களிலும் எவ்வளவு ஜனங்களை சுதேசியத்தைக் கைக்கொள்ளும்படி செய்யக்கூடுமோ அவ்வளவு ஜனங்களையும் அவ்வழியிலே திருப்பிவிடவேண்டும் இத்தகைய தீர்மானமொன்று நாகபுரி காங்கிரஸில் நிறைவேற்றி, ஒவ்வொரு பிரதிநிதிகளுடைய ஹிருதயத்திலும் பதியும்படி செய்யப்படுமானால் அது, சுதேசியத்தொழில் செல்வமும் தன் மதிப்பும் பெருகுவதற்கோர் பெருந்துணையாகும். பொதுஜனங்களுக்கு தேசிய நற்பழக்க வொழுக்கங்களில் பற்றுதலுமுண்டாம்.

### ஏலவியாதி நிவாரணம்

இப்பெயர் புனைந்த தோர் துண்டுப் பிரசுரமொன்றைத் திருவாங்கூர் விவசாய டிபார்ட்டுமெண்டார், வெளியிட்டிருக்கின்றனர், இதில், ஏலப் பயிர் செய்வோர் அறிந்திருக்கவேண்டிய பல அரிய விஷயங்களும், ஏலச் செடிக்கு நோய்கண்டால் அதற்குச் செய்யவேண்டிய பரிகாரங்களும் வெகு அழகாகவிவரிக்கப்பட்டுள்ளன. மேற்படி கிருஷி செய்வோருக்கு இப்புத்தகம் பெரிதும் பயன்தரும்-

### மூடமந்திரம் முக்கியந்தானே!

லார்டு செம்ஸ்போர்டுக்குப் பின்னர் யாரை ராஜப்பிரதிநிதியாக நியமிப்பது என்று தீர்மானமாய் விட்டதாம், ஆனால் அவருடைய பெயர் பெரியஉத்தியோஸ்தர்களுக்கு மட்டும் தெரியுமாம். இந் நியமனம் பலருக்கும் ஆச்சரியத்தை யுண்டுபண்ணுமென ஒரு பத்திரிகை எழுதுகின்றது.

### அதிகாரசக்கிரத்தைப்பின்பற்றுவோர்க்கு அதிர்ஷ்ட பதவி.

இப்பொழுது இந்தியா செக்ரடெரி சபையிலுள்ள ஸ்ரீ பூபேந்திரநாத்வசுவுக்கு வங்காளச் சட்டசபையின் அக்ராஸன பதவியும், அவ்வாறேயுள்ள ஸர் சங்கரன் நாயர்க்குச் சென்னைச் சட்டசபையின் அக்ராஸன பதவியும், கிடைக்கக்கூடும். லீடர் பத்திரிகையின் லண்டன் நிருபர்கூறுகின்ற இக் கூற்று எவ்வளவு தூரம் உண்மையாக விருப்பினும், மிதவாதிகளுக்கு அநேகமாக இப்பொழுது சக்ர திசை ஆரம்பம் என்று சொல்வது அதிகத் தவறான—கூற்றன்று.

### இந்திய கவர்னரின் இந்தியவிஜயம்.

செப்டம்பர் 24உ யன்று மிஸ்டர் லார்டு வின்னு பம்பாய்த்துறைமுகத்திற்கு வந்திறங்கினர் அவர் 25 தேதி யன்று சிம்லாவுக்குப் புறப்பட்டுவிட்டதாயறிகின்றோம்.

### இந்தியா உதவிமந்திரியா யிருக்க இஷ்டமுண்டோ?

லீடர் பத்திரிகையின் ஆசிரியரும் சென்னை மாகாண வாசியுமான மிஸ்டர் ஸி. ஒய். சிந்தாமணி, இந்தியா மந்திரி சபையின் அங்கத்தினர் பதவியை ஏற்றுக்கொள்ள இஷ்டமுண்டா எனக் கேட்கப்பட்டிருக்கின்றனராம். இவ்விதக் கேள்வியை ஒரு தேசிய வாதியைக் குறித்துக் கேட்டிருந்தால் நாம் மகிழ்ச்சி பெறுவோம்.

### அடக்கப்பட்ட அவுட்லுக்!

லண்டன் நகரில் பிரசுரமாகும் 'முஸ்லீம் அவுட்லுக்' என்ற பத்திரிகை இந்திய நாட்டை நாடாமல் தடுக்கப்பட்டிருக்கின்றது.

### மரணம் பெருக்கக் காரணமென்ன?

இம்மாதம் 21ந் தேதியோடு முடிவடைந்த வாரத்தில் சென்னை மாகாணத்தில் 570 பேர் காலராவினாலும் 433 பேர் பிளேக்கினாலும் இறந்து போயிருக்கின்றனர். மற்ற மாகாணங்களிலெல்லாம் மரணம் குறைந்திருக்கின்றதாம.

### வரவேற்பு விரும்பப்படவில்லையாம்.

ஆஸ்ஸாம முஸ்லீம்களின் மகாநாட்டிலும சுரமை பள்ளத்தாக்கு மகாநாட்டிலும் ராஜப்பிரதிநிதி சுர்சார் எனற இடத்திற்கும் சில்காட் என்ற இடத்திற்கும் விஜயஞ் செய்யும்போது உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுக்ககூடாதென்றும், மற்ற வரவேற்பிலும கலந்துகொள்ளக் கொள்ளக்கூடாதென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டனவாம்.

### 40வாலண்டியர்கள்.

திருச்சினாப்பள்ளி கிலாபத் கமிட்டியார் ஓர் அவசரக் கூட்டத்தைக் கூட்டிச் சட்டசபைக்கு அபேக்ஷகராகநிற்பவர்களுக்கு வோட்கொடுக்கக் கூடாதென்று வோட்டர்களுக்கு எடுத்துச்சொல்ல 40 வாலண்டியர்களைப் பொறுக்கி யெடுத்திருக்கிறார்களாம்.

### ஒற்றுமை நிறைந்த உற்சவக் கொண்டாட்டம்

இவ்வருஷம் பூனாவில் கணபதி உற்சவமும் முகரம் பண்டிகையும் ஏககாலத்தில் நேரும்படியான சந்தர்ப்பம ஏற்பட்டதாம். அப்பொழுது, முஸ்லீம் ஊர்வலங்களும் ஹிந்து ஊர்வலங்களில் முஸ்லீம் தலைவர்களும் குழுமியிருந்து, பொதுஜனங்களுக்குப் பிரசங்கஞ் செய்ததாகவும், கணபதி விக்ரஹங்களுக்கு முன்பாக நின்றுகொண்டு பல முஸ்லீம் தலைவர்கள் பிரசங்கித்ததைக் கண்ட மிகுதியும் சந்தோஷமாக இருந்ததென்றும் மகாராட்டாப் பத்திரிகை எழுதுகின்றது. ஹிந்து முஸ்லீம்களின் ஒற்றுமைக்கு அறிகுறியாக லோகமான்ய திலகரின் படமொன்றைக் கூடகூண்டின் பின்னால் முஸ்லீம்கள் தூக்கிச் சென்றனராம். இவ்வொற்றுமை யாதொருவிக்கமுமின்றி நீடித்து நடைபெறுவதற்கு அவ்விக்நேசுவரனை நாம் வேண்டுவோம்.



# சமூகச் சீர்திருத்த விஷயம்.

## அனுசரிக்கவேண்டிய ஆறு முறைகள்.

இம்மகுடமிட்டுச் சென்ற 37-வது இலக்கத்து மித்திரனில் 'ஜாதியபிமானமும் அதன் வளர்ச்சி முறையும்' என்ற விஷயத்தைப்பற்றிச் சிறிது முன்னுரை கூறி அந்த வியாசத்தில் "சமூகத்தைச் சீர்திருத்துமுன் சிற்சில முறைகளை அனுசரித்தல் வேண்டுமெனவும்" சில ஆலோசனைகள் கூறப்பட்டன. இப்பால், அந்த முறைகளை முறையே ஆராயத் தொடங்குவோம்.

### முற்கால தனவைசியர்களின் ஜாதியபிமானம்.

தனவைசியர்களின் ஆதிவாசஸ்தானமெனக் கூறப்படுகின்ற நாகநாட்டில் சாந்தி (யா) புரியிலே வசித்துவந்த காலம் முதல், பிற்காலத்தில் அவர்கள் பல காரணங்களால் தமது வாசஸ்தானத்தை மாற்றிக்கொள்ளுமாறு எவ்வளவோ சம்பவங்களில் நிகழ்ந்தும், அவர்கள் அவற்றை யெல்லாம் சகித்துக்கொண்டு தம் ஜாதி யபிமானத்தைச் சிறிதும் விட்டுவிட மனமில்லாமல் சமூகத்தினர் எல்லோரும் ஒன்றுசேர்ந்து முறையே காஞ்சிநகர், சோழநாடு—காவிரிப்பூம் பட்டினம் பாண்டிநாடு சிலவற்றை யடைந்தும், சுய கௌரவத்தாலும் சுயமுயற்சியாலும் சுய உதவிகளாலும், முன்னேற்றமடைந்து, தர்மச் செல்வம் நிறைந்த சீமான்களென இன்றும் உலகத்தினால் மதிக்கப்பட்டு வருவதே அவர்களின் பூர்விக ஜாதியபிமானத்திற்குப் போதிய சான்றாகும்.

ஆனால், அவர்கள், தமது ஒரு சமூகவாழ்வை மாத்திரம் கருதி நிற்காது உலகிலுள்ள யாவரும் நன்மை பெறவே தாமீசனால்மனிதசமூகத்தில் படைக்கப்பட்டிருக்கின்றனரென்றும் மனிதசமூகம் உயிர்வாழ்வதற்கு முறையே, விவசாயம், கைத்தொழில், தேசபாதுகாப்பு, தத்துவஞானம், ஆன்ம அறிவு முதலிய இன்றியமையாச் சாதனங்களை நிறைவேற்றுதற்கெனப் பற்பல சமூகத்தினரைப் படைத்திருப்பது போல ஈசனும், தமது சமூகத்தை வர்த்தகத்தார்க்கு நன்மைபுரிந்து தர்மநெறியில்வாழ்ந்து வருவதற்கெனவே, அருள் புரிந்திருக்கிறாரென்றும், ஆதலால், தாம் மனித சமூகத்தின் நன்மைக்கான நற்றொழில்களை நாள்தோறும் நடாத்திவரவேண்டும் என்றும் இடைவிடா ஊக்கங்கொண்டிருந்தனர் என்பதை நாம் ஆதியிலே மனத்திற் கருதவேண்டும். நம்சமூகத்தில் செல்வமுடையோர், தமதுசமூகத்திலுள்ள ஏழைகளை ஆதரித்துவந்ததுடன், அந்நியசமூகத்திலுள்ளவர்களையும் வேற்றுமையின்றிப் பெரிதும் ஆதரித்துவந்தனர் என்பதையும் நாம மறக்கக்கூடாது. அவர்கள் மதம், ஆசாரம், பொதுநன்மை ஆகிய இவைகளைப் பரிபாலிப்பதையே தமது தொழிற்பயனாகக் கொண்டனர். அறத்தை நாடியே அவர்கள் பொருளைத் தேடினர். அந்தணர்களின் கூட்டுறவிலும், அரசர்களின் பாதுகாப்பிலும், தொழிலாளரின் ஒத்துழைப்பிலும், தமது இந்திய சகோதரர்களெல்லோருக்கும் தாம் செலுத்தவேண்டியபரோபகாரக் கடமையை நிர்வகிப்பதிலும் அவர்கள் சிறிதேனும் பின்வாங்குவதில்லை. இந்திய ஜனசமூகத்தின் நல்வாழ்விற்குரிய சாஸ்திரங்கள், கலைகள், வித்தைகள், முதலியவற்றின் அபிவிருத்தியிலும், அவைகளிற் கூறப்பெற்ற நன்முறை-விதிகளைப் பின்பற்றித் தமது வாழ்நாளை நடத்துவதிலும் அவர்கள் சிறிதேனும் அக்கறையின்மை பாராட்டுவதில்லை. "ஒற்றுமையினும் ஜாதிய நியமங்களாலும் ஒரு சமூகம் சிறந்து செல்வமும் பெற்றுப் பிற சமூகங்களால் நன்கு மதிக்கப்படத்தக்க முறை இதுதான்" என அவர்கள் நன்கு நிரூபித்துவந்தனர். "தம் சமூகத்தினரின் முன்னேற்றத்தைக் கெடுத்து, அவர்களிற் சிலரைத் தாழ்மைப்படுத்தி ஏழைகளாக்கி விடுவது" என்ற முறையை அனுஷ்டித்ததேயில்லை. அக்காலத்தில் சமூகத்தினருள் நடைபெற்றுவந்தவழக்குகளை "சமூக கட்டுப்பாட்டின் எல்லை கடந்து பிறரிடத்தில்" கொண்டுபோய்ப்பஞ்சாயத்துப் பேசுவது, என்ற வழக்கத்தையும் கோர்ட்டுகளுக்குச் சென்று சமூகச் செல்வத்தை இயன்றவரையில் சீரழிப்பதென்ற விருதத்தையும் அவர்கள் அனுஷ்டித்ததில்லை. ஆனால் சமூகத்திலுண்டாகின்ற எல்லாவித வழக்குகளையும் அதிகச் செலவின்றி தம் சமூகத்திலுள்ள பெரியோர் பலர் கூடிச் செய்கின்ற பஞ்சாயத்துத் தீர்ப்பையே அவர்கள் தெய்வசம்மதமான தீர்ப்பு எனக் கருதிவந்தனர். அவர்கள் ஒவ்வொரு ஊரிலும் இத்தகைய பஞ்சாயத்து சபைகளை நியமித்து. பஞ்சாயத்தினர் விதிக்கின்ற பக்ஷபாதமற்ற கட்டளையின்படி எல்லோரும் நடப்பது என்ற முறையை விடாது கைப்பற்றிவந்தனர்.

ஆங்கிலேயர் அரசாங்கம் இந்நாட்டினுக்கு வந்து அநேக ஆண்டுகள் ஆகும்வரையிற் கூட அவர்கள் இவ்வழக்கத்தை விட்டுவிடவில்லை பிறகு அந்நிய சமூகத்தினர் பலரும் தம்முள் நடக்கின்ற அக்கிரம விவகாரங்களுக்குத் தம் பக்கமே அனுகூலத் தீர்ப்புகள் கிடைக்கவேண்டுமென விரும்பி அந்நியக் கோர்ட்டுகளை அதிகமாக நாடவே, அந்தப் பழக்கம் நம்மவரையும் பிடித்துக்கொள்ளத் தொடங்கியது. அந்தப் பழக்கம் நல்லது என்று அவர்களுக்குத் தோற்றவே, அவர்கள் தமது சகோதரர்களும் பெரியோர்களும் நிறைந்த ஜாதியசபையைத் தமக்குநன்மைபயக்கும் நீதிசபை என்று கருதவில்லை. ஆனால் அதற்குமாறுபாடாகதர்மநியாயத்தை விளக்கவேண்டிக்கூட்டப்பட்ட அந்த நீதிசபைமுன்தாம் "வணக்கமாக நின்று விடைகூறுவது கௌரவக்குறைவு" என்று கருதி, லக்ஷக்கணக்கான பொருட் செலவு செய்தும் தமக்குச் சரியான நியாயங்கிடைக்க வழியில்லாதபற்பல அந்நியபஞ்சாயத்து சபைகளையே (அதாவது பற்பல கோர்ட்டுகளையே) பெரிதும் விரும்பினர்.

இந்த "அனுஷ்டானம்" நாடெங்கும் பரவவே, கிராமத்தலைவர், தங்கள் உற்றார், உறவினர் முதலிய பெரியோர் முன்னிலையில் பொய்சொல்லக் கூசிநின்ற பலரும், வேடிக்கைக் கூட்டம் நிறைந்த கோர்ட்டுகளில் பகிரங்கமாகத் தங்களுடைய புத்தி சாதுர்யம் இடங்கொடுத்தவரையில் தாராளமாகப்பொய்சொல்லவும், பொய்சாக்ஷிகளை ஜோடித்துத் தமக்கு அனுகூலம் போல்பேசுபவர்களுக்குப் பொருளுதவிசெய்து, தமது நியாயத்தைஅவர்களிடமிருந்து சில்லரையாக விலைக்கு வாங்கவும் துணிந்தனர்! "சமூகச் செல்வத்தை—தமது சகோதரர்களின் இடைவிடாத கஷ்டத்தால் திரைகடலோடியுந் தேடிக்கொண்டு வரப்பெற்ற பணத்தை—வேண்டாவழிகளிற் செலவிடவேண்டியது அவசியந்தானா? அல்லது ஜாதியப் பஞ்சாயத்தின் முன்னிலையில் சொற்பச் செலவிலே தர்மநியாயத் தீர்ப்பைப் பெற்றுக்கொண்டு விடுவது நலமா? என்று ஆலோசிப்பதற்கு கூட அவர்களுக்கு அவகாசம் இடங்கொடுக்க மறந்துவிட்டது. வருங்காலப் பஞ்சத்தின் அறிகுறியாக வாக்சாலம் நிறைந்த லாயர்களும் வரவரப் பெருக ஆரம்பித்தனர், கையில் பணம் அதிகமாக இருப்பவர், தம் பக்கம் தீர்ப்புக்கிடைக்க வேண்டுமென விரும்பி, இடைவிடாத ஆராலோசனைகளில் ஈடுபட்டு அதற்கு வேண்டிய ஏஜண்டு மந்திரிகளையும் நியமித்து; அவர்களின் நடத்தை விசேஷத்தால் வேண்டிய காலம்வரை கேஸ்கள் ஒத்திப்போடப்பெற்று, வேண்டாக்கவலைகளை வேண்டியவரை விலைக்கு வாங்க முன்வந்தனர். சின்னக்கோர்ட்டு, பெரிய கோர்ட்டு, அப்பீல் கோர்ட்டு, அக்கரைக் கோர்ட்டு (பிரிவி கௌன்ஸில்) முதலியகோர்ட்டுகளின் பஞ்சாக்ஷரப் படியில் இந்தக் கேசுகள் காலெடுத்து வைக்குந்தோறும் 'காசுப்பைகுறைகிறதே' என்பதைக்கூட அவர்கள் நினைத்துப்பார்க்க 'தேசாசாரம்' இடங்கொடுக்கவில்லை. கேஸ் இனிநடத்தமுடியாது என்ற முடிவு தானாகவே ஏற்படுகின்றவரையில், அநேகர் முன் வைத்த காலைப் பின்வாங்குவதில்லை என்ற சத்தியாக்கிரகத்தை அனுஷ்டிப்பதுண்டு. இவ்வாறு நம் சமூகத்தின் பூர்விக அபிமானம் சிதறுண்டு, அது தனித்தனியே பிரிந்து வாழத்தொடங்கிய காலம் முதல்தான் (அதாவது 1857வது வருடமுதல்தான்) நம்சமூகம் லக்ஷக்கணக்கான (ஏன்? கோடிக்கணக்கான) செல்வத்தைக கோர்ட்டு இனங்களிலே கைசோரவிட்டு, அவைகளால் அநேகந் தீய வழக்கத்தைச் சமூகத்தில் புகுவித்தது பெரிதும் விசனிக்கத்தக்கதாம். அன்பர்களே! உற்றார், உறவினர், ஊரார், பிற சமூகத்தார், மனிதவர்க்கத்தார் ஆகிய இவரனைவர்க்கும் தான் யாதோர் தீமையும் புரியாது வாழ்ந்துவர வேண்டுமென்று சாஸ்திரமுறையிலே தனது நீதியுணர்வைச் செலுத்தி அதினின்றும் சிறிதும் பிறழாது மனச் சமாதான முற்று வாழ்ந்து வந்த நம் பூர்விகர்களது அக்காலத்திய அமரிக்கை வாழ்க்கையைக்குறித்தும், இக்காலத்தியஓய்வின்றிய வாழ்க்கையைக்குறித்தும் நீங்கள் இங்கு சற்றுச்சிந்தித்தல் வேண்டும். "நமது பழைய சமூக அனுஷ்டானங்கள் யாவும் தீமையன அன்று" எனக் கருதுவதற்கு இங்கு ஒருவாறு இடமுண்டு. இனி நமது மனம்மாத்திரம் இடங்கொடுக்கும்படி நாம் ஒருவிதப் பழக்கத்தைக் கற்றுக்கொண்டுவிட்டால், நம் சமூகத்தில் வாழும் அனுபவமுதிர்ந்த புத்திமான்களது முன்னிலையில் நம் விவகாரத்தைத் தீர்த்துக்கொள்ளவும், நம் சமூகச் செல்வம் வீணே அழியாதிருக்கவும், நமக்குள் தினந்தோறும் பகைவர்கள் விருத்தியாகாதிருக்கவும் நாம் வழி செய்துகொள்ள இடமுண்டு. மெய்யே பேசுவது, என்ற நம் பெரியோர் கொள்கையையும் நாம் அப்பொழுது மிகுதியாகக் கைக்கொள்ளலாம். நீதிஸ்தலங்களுக்குச் சென்று நாம் வீணே கழிக்கின்ற காலங்களை வேறு நல்வழிகளிலும் செலவிட்டு விடலாம். "காலமே பணம், காலமே கடவுள், முயற்சியே காலம்" என்ற பழமொழியிலுஞ்சிறந்த தத்துவமுண்டு. இனி,நம் முன்னோர்கள் கைக்கொண்டொழுகிய உண்மைச் சமூகஅபிமானமாகிய இந் நன்மார்க்கத்தை நாமும் பின்பற்றிச் சென்று மனோவியாகூலங்களின்றிச் சௌக்கியமாய் வாழலாம். இவ்வழியே சென்றால், கைப்பொருளைச் செலவிட்டும், கைக்கூலி கொடுத்தும் வக்கீல்களின் புறத்தே கூலிக்காரர்களைப்போல் ஓடியும் திரிந்து நம் சமூக கௌரவத்தை இழந்து நாம் துன்புறவேண்டாம். அந்நியர்களின் கோர்ட்டுகளில் அடிமைபோல் நின்று, விளங்காத பாஷையில் வேண்டாத வியாக்கியானஞ் செய்து வழக்குகளை முற்றவிட வேண்டாம். நம்மைப்பெற்று வளர்த்து நமக்குப் பாலூட்டித் தாலாட்டி வளர்த்த நம தருமைத் தெய்விகத்தாய்ப்பாஷையில்நமதுவிவகாரங்களைத் தீர்த்துவிடுவதற்குப்போதிய பதங்களுண்டு! என்பதையும் நாம் மறந்துவிட வேண்டாம், ஆனால் முற்காலத்திய நம் முதியோர் ஆசாரங்களைக்கடைப்பிடிப்பதுகாரணமாக நம் தேகத்தின் வியர்வை யொழுக, நம்மனம் பெரிதுங்கவலைப்பட, நாமாவது அல்லது நம்முன்னோராவது சம்பாதித்த பணத்தை, வீணில் செலவழிக்க வழியின்றி நம் குலத்தினரையும், நம் குடும்பத்தினரையும், (நமது முன்னோரையும் நமது வருங்கால சந்ததியினரையும்) நம் தேசத்தையும் நாம் நல்வழிப்படுத்தி இன்புறலாம். விவாகங்கள், விசேஷச் சடங்குகள், வீட்டுச்செலவுகள், இனத்தார் தம்முன் மரியாதைக்காக வழங்கிக் கொள்ளும் நாகரிகச் செலவுகள் முதலிய ஒவ்வொரு செயல்களையும், நாம் சீர்தூக்கிப்பார்த்து, நம்முடைய உண்மையான ஜாதிய கௌரவத்திற்கும் ஜாதியச் செல்வவிருத்திக்கும் காரணமாய் நிற்கின்ற ஒவ்வொரு சதாசாரங்களையும் நாம் கைக்கொள்ளலாம். நம்முடைய ஒவ்வொரு புள்ளிகளின் நன்மைக்கும்—ஒவ்வொரு புள்ளிகளின் சுகவாழ்விற்கும்—எளிதாயிருக்கத்தக்க வண்ணம் நம்முடைய சொந்தப் பழக்கவழக்கங்களை நாம் எல்லோரும் அனுஷ்டிப்பதற்கான ஒரு தீர்மானவழியை, நம் சமூகத்தினர் அனைவரும் "வேற்றுமையின்றிப் பின்பற்றுவது" என்ற முடிவை நம் சமூக மகாசபையினால் நாம் ஒரு நியமமாகச்செய்துகொள்ளலாம். அதனைக் குறித்து ஏற்றத் தாழ்வான உணர்ச்சியோ, கௌரவக் குறைவு என்ற பாவனையோ நமக்குள் முளைக்காது. "எல்லோருஞ் சேர்ந்து செய்கின்ற தீர்மானத்திற்குஒரு தெய்விகசக்தியுண்டு" அதுதான் ஜாதிய கௌரவம். அந்த கௌரவம் ஒவ்வொரு மனிதனுக்குமிருக்குமுண்டு. அதனை அனுபவியாமல் இழந்து, பிறசமூகத்தினரின் பழக்கவழக்கங்களில் மோகங்கொள்வதனாலேயே ஒரு சமூகம், சுய கௌரவமிழந்து, பிறசமூகத்தின் வாழ்க்கை முறைகளையும் முற்றிலும் கைக்கொள்ள முடியாமல் வருந்துகின்றது. நமக்கு அவ்விதப்பகட்டான ஒரு புதிய நாகரிகம் வேண்டுமென நாம் கருதுவதைப்பார்க்கிலும் "தாம் அநாகரிகவழக்கங்களினின்றும் விடுபட்டு நம்முடைய பூர்வ நாகரிக வழிகளை யறிந்து மேன்மை பெற்று வாழவேண்டுமென விரும்பிச் 'சீர்திருத்தம் பெற்று வருகின்ற" ஒரு மேனாட்டுப் பழக்கவழக்கங்களை நாம் விரும்புவதைப் பார்க்கிலும்-'இன்னும் நாகரிக சாஸ்திர முறைகளின் பாலர் வகுப்புக்குவந்து சேராது தினந்தோறும் தம் முடைய ஸ்தூல சூக்ஷ்ம ஆசாரமுறைகளை மாற்றிக்கொண்டே வருகின்ற ஒருஜாதியாரைப்பார்த்து, அவர்களின் நடை, அவர்களின் உடை, அவர்களின் சரீரத்தோற்றம், அவர்களின் மனோபாவனை, அவர்களின் ஆசாரம், அவர்களின்ஸ்நானபானம், அவர்களின் உணவு, அவர்களின் குணம், அவர்களின் கொள்கை ஆகிய இவற்றை நாம் தினந்தோறும் கண்டு மகிழ்ந்து வருவதைப் பார்க்கிலும்—அவர்களின் முறைகளே நமக்கு நன்மை பயக்குமென நம் தற்கால மனோபாவனை செல்வதைப் பார்க்கிலும் – அடுத்த நிமிஷத்தில் மாறுபடக் கூடியதும், அடுத்த நிமிஷத்தில் விவேக ஆராய்ச்சி செய்யத் தொடங்கிய பின் உதறி யெறியத்தக்கதுமாகிய அந்த அநாகரிக ஆசாரங்களைத் தள்ளி, சரித்திரக்காரர்களின் புத்தி கற்பனை விசேஷ ஆராய்ச்சிகளுக்கு அப்பாற்பட்டதாய், வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள், இதிகாசங்கள், தர்மசாஸ்திரங்கள் முதலிய அழிவற்ற கலைஞான நாகரிக சாஸ்திரங்களால் நன்கு புகழ்ந்து வழிகாட்டப்பெற்றதாய், "பட்டினத்தடிகள் போல்யாரும் துறப்பதரிது! அரிது!' என்று அனுபூதிச் செல்வமாகிய ஸ்ரீ தாயுமானரால் வாயாரப் புகழ்ந்து வாழ்த்தப்பெற்ற குபேர அவதாரமாகிய ஸ்ரீ பட்டினத்து அடிகள்என்னும் நம் மரபில் தோன்றிய மகாஞானியால் அனுஷ்டித்துவரப் பெறுததாய், ஸ்ரீபரசிவனது அருள்வாக்கினால் ஆசி கூறப்பெற்றதாய் விளங்குகின்ற அந்த மறைகள் கூறும் அறநெறியை—ஆரிய ஒழுக்கத்தை-ஆரியவுடையை, சுய ஜாதியஉடையை,சுய ஜாதிய ஆசாரத்தை, சுய ஜாதிய அபிமானக் கொள்கைகளை-உயிரினும் மேலாய உயர்பொருளெனக் கைக் கொண்டு வாழ்தல் நலமன்றோ? தர்மம் தழைக்க அந்நெறிகளை யன்றோ நம்மன்னை பிதாக்களும், தாதை முதாதைகளும் கடைப்பிடித்து வாழ்ந்து வந்தனர். அம் முன்னோர்களின் தவவொழுக்கங்கள் நேர்மை நிறைந்தனவாய் விளங்கியமையாலன்றோ அவர்கள் திருவருள் செல்வம் மலிந்த பெரியோர்களாய் விளங்கலாயினர்? அவர்களின் அறஞ்செறிந்த ஒழுக்கங்களின் செழுமையாலன்றோ நாம் நாடுநகரம் கோட்டைக்கொத்தளங்களிலெல்லாம் புகழ்க்கொடி விளங்கப் புனிதவாழ்க்கையில் நிலைத்துக் களிக்கின்றோம்! அவர்கள் நன்னெறியும், நன்னாகரிகச் சீர்திருத்தவாழ்வும் சர்மவழக்க வொழுக்கங்களும் நிறைந்துவாழ்ந்தன ரென்பதற்கு நாம் பல்லாயிரக் கணக்கான குடும்பஸ்தர்களாய் எல்லா நாடுகளிலும் தர்மச் செல்வத்தோடு விளங்கி வருதலும் போதியசான்றுபகரும். இனி இந்த ஜாதிய அபிமானச்சிறப்பை மூன்றுவகையாகப் பிரிக்கலாம். அவை, உத்தமோத்தம ஜாதிய அபிமானம், உத்தம ஜாதியபிமானம், மந்த ஜாதியபிமானம், எனமூவகைக் கூறுபாட்டிலடங்கும். அவை யடுத்து விவரிக்கப்பெறும்.

கதிரேசன்.

# ஜாதிய பஞ்சாயத்து மகா ஸபை.

சென்ற வாரமித்திரனில் ஜாதியப்பஞ்சாயத்தினாலேற்படும் நன்மைகளையும், அவைகளை விட்டுக் கோர்ட்டுகளுக்குச் செல்வோர் படுந்துன்பங்களையும், அவமானங்களையும் பற்றிச் சிறிது வரையப்பெற்றது.

இனி, தற்காலத்தில் நடைபெற்றுவரும் நியாயஸ்தலங்கள் என்று சொல்லப்பெறுகின்ற கோர்ட்டுகள், உண்மையில் பொதுஜன ஒற்றுமைக்குச் சாதகமாயிருக்கின்றனவா என்பதைச் சற்று ஆராய்வோம்.

ஒருவன் வியாச்சியம் தொடருவதற்கு அநேகம்காரணங்களுள. அவை: தன் குடும்பத்தாருடன் சண்டையிட்டுச் சொத்துக்களைப் பாகம் செய்வதற்காகவும், கொடுக்கல் வாங்கல் சம்மந்தத்திற்காகவும், வேறு சில்லரைச் சண்டை-சச்சரவு-கொலை களவு முதலியவற்றிற்காகவும் ஒருவர்மேலொருவர் வியாஜ்ஜியம் தொடரக் காரணமாகின்றது எனக்கூறலாம். மேற்காட்டியவைகளில், ஒவ்வொன்றும், ஜன ஒற்றுமையைப் பாதிப்பதற்குக் காரணமாயிருப்பதைஇங்குவிவரிப்போம்.

முதலாவது, அநேகம் குடும்பங்களில், சகோதரர்களும், தகப்பனும் பிள்ளையும், சொத்துக்களைப் பாகம் செய்து கொள்ள நேரிடும் பொழுது, பாகம் சரிவரச்செய்துகொள்ள அவர்களது மனம் இடங்கொடாமல், வக்கீல்களிடம் ஆலோசனைக்குச் செல்லுகிறார்கள். அவர்களின் ஆலோசனைக்கேற்ப, இவர்கள் வழக்காட ஆரம்பிக்கின்றனர். அவ்விதம் வியாச்சியம் தொடருவோர், தமக்குள் ஒரு கக்ஷிக்கு அசலில், அபஜயம் ஏற்பட்டுவிட்டால், உடன் முடிவான அப்பீல்கோர்ட்டு (ப்ரிவிகௌன்சில்)சென்று, அதற்கும் மேல் கோர்ட்டில்லையே எனவும், அல்லது மீண்டும் கேசுக்குச் செலவு செய்யப் போதுமான பணமில்லையே யெனவும் எண்ணி வருந்துகிறார்களே தவிர, தங்களுக்குள் பஞ்சாயத்தார் மூலம் விவாதங்களைத் தீர்த்துக்கொள்ள அவர்கள் மனம் இடங்கொடுப்பதில்லை.

இவர்களின் செயலைக் கவனிக்கும்பொழுது. "தன் வீட்டைக் கொள்ளையிடச் செய்து, செவ்வாரம் பகிர்வது" என்பதுபோல் ஆகின்றது. ஏனெனில், ஒரு குடும்பத்திலுள்ள இரு சகோதரர்கள், தங்களுடைய மனம் அமைதியின்மைகாரணமாகத் தங்களுக்குப் பாத்தியப்பட்ட சொத்துக்களிலிருந்தும், பணங்களை வாரிவாரி, வியாச்சியத்திற்குச் செலவிடுகின்றனர்; அவர்கள் அகங்காரத்தினால் து

இதன் தொடர்ச்சி 6-ம்பக்கம் காண்க

### கண்டரமாணிக்கம்.

ராஜ விஜயம். 28-9-20.

இன்று மாலை எட்டரை மணிக்கு செ சிதா லட்சுமணன் செட்டியாரவர்களின் பங்களாவுக்கு மாக்ஷிமை தங்கிய சிவகெங்கை ஜெமீன்தாரவர்களும் மந்திரிபிலீஸ்துரை, யவர்களும் டிஸ்டிரிக்ட்கலெக்டர் தம் புத்திரரையவர்களும் இன்னும் சில பிரமுகர்களும் விஜயம்செய்தார்கள்.

ஏற்கனவே தயாராயிருந்த பெரியமேளம் பியாண்டு வகையறா வாத்தியங்களுடன் டி செட்டியாரவர்கள் அவர்களை எதிர்சென்று அழைத்துவந்து மஹாராஜா அவர்களுக்கு ஜாதவேலைசெய்யப்பட்ட கல்கத்தா ஆரங்களும் மற்ற முள்ளவர்களுக்கு ரோஜாப் புஷ்ப ஆரங்களும் சூட்டி தாம்பூலாதிகள் வழங்கி ராத்திரி 10 மணிக்கெல்லாம் டீபார்ட்டி செய்து வைத்தார்கள்.

அப்பால் வீணைக்கச்சேரி ஆரம்பிக்கப்பட்டு ராத்திரி 12மணிக்கெல்லாம் கச்சேரி முடிந்தவுடன், வந்தவாகளுக்கெல்லாம் மல்லிகைசந்தன தாம்பூலாதிகள் வழங்கி அவர்கள் ஜாஸ்தானம் சென்றனர்.

### கோங்கரத்தி

உற்சவம்:—லட்சுமி நாராயணபுரத்திற்குப் பிரதிநாமமாகிய கோங்கரத்தி லட்சுமிநாராயணப் பெருமான் கோவில்கெருட உத்சவக்கொண்டாட்டம் (4-10-20) காலை கோகுல கிருஷ்ணமூர்த்தி தவிழ்த்துவெண்ணெசாப்பிடுகிற அலங்காரமும்,ராத்திரி கண்டரமாணிக்கம் அ. கா. காசியப்பசெட்டியாரவர்களால் புதிதாய் திருமணம் செய்து வைக்கப்பட்ட கெருடவாகனத்தில் அலங்காரமும்செய்து வீதியில் எழுந்தருளச்செய்தது மிகவும் சிறப்பாய் இருந்தது. டி ஆலயத்திற்கு சுமார் நான்கு மாதத்திற்கு முன் நம்மித்திரனில் பிரசுரித்தபடி கடியாபட்டி வைசியரொருவரால் உத்சவ விக்கிரகம் ஏற்பட்டதின் காரணமாக டி வாரலேயே வாகனமும் ஏற்பட்டுவிட்டது. சீக்கிரம் கண்டரமாணிக்கம் நகரத்தாரவர்களால் விருஷோத்ஸவமும் நடைபெறுமென்று தெரிகிறது.

உ
சிவமயம்
வேலுமயிலுந்துணை.

## அன்பர்களுக்கு அறிவிப்பு

நமது மித்திரன் இப்பொழுது உருவத்திலும் விஷயங்களிலும் விரிவு பெற்று வெளிவருகின்றமைபற்றி, நம் சந்தாநேயரிற் பலரும் புகழ்ந்து கடிதங்கள் பல அனுப்பிவருகின்றனர். அன்பர்கள் அவ்வாறு நம்மித்திரனை யன்றிப் படித்து நமக்கு நல்லூக்கமளித்து வருகின்ற நற்செயலுக்கு நாம் பெரிதும் நன்றி பாராட்டுகின்றோம். சென்ற இரண்டொரு வாரங்களாக நம்மித்திரனது ஆபீஸ் வேலையாளரிற் சிலர், சரீர அசௌக்கியங் காரணமாக வாராமைபற்றி, மித்திரன் சிறிது காலந்தாழ்த்தி வெளி வந்தனன். இனி, மித்திரன் உரியகாலத்தே வேண்டியவிஷயங்களைத்தன தங்கத்தில் தாங்கி, வெளிவருவானென அறிவிக்கின்றோம். பத்திராதிபர்.

## வைசியமித்திரன்
1920ஸு அக்டோபர்மீ 4உ

## கனம் மிஸ்டர் V. S. ஸ்ரீநிவாச சாஸ்திரியாரும் "ஒற்றுமையாமைப் பிரசங்கமும்"

இன்று மாலை இவ்வூருக்கு விஜயஞ்செய்த கனம் மிஸ்டர் வி. எஸ். ஸ்ரீநிவாச சாஸ்திரியார் அவர்கள் ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசுவர வித்யாசாலை ஹாலில் ஒரு அரிய பிரசங்கஞ் செய்தார்கள். அதன் விவரங்களை வேறோர் பத்தியில் காணலாம்.

தற்காலம் தேசமகாஜனங்களின் ஆலோசனைக்குப் பெரிதும்முக்கியமாயுள்ளஒற்றுமையாமையைப்பற்றியே மிஸ்டர் சாஸ்திரியார் இரண்டு மணி நேரம் வரை பிரசங்கஞ் செய்தனர். அதில்ஒற்றுமையாமையின் நான்குபகுதிகளையுங்குறித்துப்பேசிவரும்பொழுதுபள்ளிக்கூடங்களின்விஷயமாயும், சட்டசபைகளின் பகிஷ்காரத்தைப்பற்றியும், மிஸ்டர் சாஸ்திரியார் இதற்குமுன் சென்னை, கும்பகோணம் முதலிய இடங்களில் என்ன என்ன காரணங்களை எடுத்துக்காட்டி ஒற்றுமையாமைத் தீர்மானம் பூரண அங்கீகாரத்திற்கும் உரியதல்ல என்று விளக்கினரோ அதே காரணங்களைத்தான் இவ்வூரிலும் விளக்கிப்பேசினர். அதனால் அவைகளைப்பற்றி நாம் இப்போதொன்றும் பேசப்போவதில்லை. என்றாலும் மிஸ்டர் சாஸ்திரியார் 'திலீபவேந்தன் ஒரு பசுவைக் காப்பாற்ற வேண்டும்' என்னும் அற்பவிஷயத்துக்காகத் தனதெல்லாநன்மைகளையும் இழக்கத் துணிந்ததுபோல், நாம் 'சொற்ப விஷயத்திற்காக, பெருநன்மைகளை இழந்துவிடக் கூடாது' என ஒரு சிங்கக் கதையைத் திருஷ்டாந்தமாகக் கூறியதை மாத்திரம் நாம் கவனிக்காமலிருக்க முடியவில்லை. ஏனெனில் அதனைத் தான் நாம் இப்பொழுது நன்றாக ஆராய்ந்து பார்க்கவேண்டும் எனத்தேசியநிலைவற்புறுத்துகின்றது. மிஸ்டர் சாஸ்திரியார் கூறியகதையை ஸ்ரீ காளிதாஸன் வெகு அழகாக எழுதியிருக்கின்றார். அதன் விருத்தாந்தத்தை நேயர்கள் ஞாபகத்தில் கொண்டால் மிஸ்டர் சாஸ்திரியாரின் பிரசங்கப் போக்கை அறிந்து கொள்ளக்கூடுமாதலின் அதன் சுருக்கத்தை முதன் முதலில் கூறிவிடுகின்றோம். திலீபவேந்தன் புத்திர சந்ததியில்லாமல் வருந்தி ஸ்ரீ வசிஷ்ட முனிவரிடஞ்சென்று தனக்கு சற்புத்திரனுண்டாகுமாறு ஒருஉபாயங்கூற வேண்டுமென வேண்டினர். அதற்கு வசிஷ்டமுனிவர் "நம்மிடத்துள்ள காமதேனுவை வழிபட்டுவரின், உம்முடைய எண்ணம் ஈடேறுமெனக் கூறினர். அவ்விதமே திலீப வேந்தனும் தினந்தவறாது காமதேனுவின் புறமே கானகஞ் சென்று அதன் தபவை எதிர்பார்த்தவனாய், அதற்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து வந்தான். ஒருநாள் காட்டில் மேய்ந்துகொண்டிருக்கும் காமதேனுவை ஒரு சிங்கம் வந்துஇழுத்துக்கொண்டு குகைக்குள் சென்றது. அப்பொழுது அரசன் அந்த சிங்கத்தைத் துறத்திச்சென்று அதன் மீது பாணந்தொடுக்க முயன்றான்' அதனைக் கண்ட சிங்கம், தான் நிகும்பனது கிங்கரனாகிய கும்போதரனென்னும் ஊழியனென்றும், ஈசனைத் தூக்கிச் சுமப்பதே தனது வேலையென்றும் கூறி, ஸ்ரீ பார்வதி தேவியினது பிரியத்திற்குரிய அந்த வனத்தைப் பாதுகாப்பதற்காகத் தான் ஈசனால் கட்டளையிடப்பெற்றிருப்பதாயும், ஆகவே தற்செயலாக அன்று தனக்கு உணவெனக் கிடைத்த பசுவைத் தான் விட்டுவிடமுடியாதெனவும் கூற, அரசன், இக்காமதேனுவானது முனிவருக்குச் சொந்தமாதலால் அவரது ஆச்சிரம காரியங்கள் குறைவின்றி நடைபெறவும், அதன் கன்று வாடாதிருக்கவும் விரும்பி, 'பசுவுக்குப் பதிலாகத் தான் தனது சரீரத்தைச் சிங்கத்திற்குத் தத்தம் செய்வதாகக்கூற, அப்பொழுது சிங்கம் திலீப வேந்தனைப் பார்த்து 'ஒரு அற்பப் பசுவுக்காக ஒரு குடைநிழலின்று உலக முழுவதையுமாளு மேகசக்ராதிபத் தன்மையையும், இவ்வருமையான வாலிப வாழ்க்கையையும் நீர் இழக்கத் துணிந்ததை நோக்க, நீர் பல ஆலோசனைக் குழப்பத்தால் மூழ்கியிருக்கின்றீரென நான் கருதுகின்றேன்' என்று சாதுரியமாகக் கருத்து நிறைந்த சொற்களால்—விடை கூறிற்று. அதுபோல மிஸ்டர் சாஸ்திரியார், 30 கோடி இந்தியர்களும் ஒருசொற்ப விஷயத்திற்காகப் பெரிய பெரிய நன்மைகளையெல்லாம் இழந்துவிடக்கூடாது எனக் கூறுகின்றார். இதில் நமக்குப் பல கருத்துக்கள் தோற்றுகின்றன. திலீபவேந்தன், வஸிஷ்ட முனிவரது கிருபையினால், நினைத்ததை யளிக்கும் காமதேனுவைப் பெற்று, தான், 'மக்களின்மை' என்னும் துன்ப வாழ்வினின்றும் விடுபட்டு, மக்களின்பம் என்னும் சுதந்தரமுற்று வாழவேண்டுமென விரும்பியதுபோல, 30 கோடி பாரத மக்களும், ஈசனது திருவருளால் 'நினைத்ததை யளிக்கும் காமதேனுவைப்போன்றகாங்கிரஸ்மகாசபையைப் பெற்று, தாங்கள், துன்பம் நீங்கிய சுக சுதந்தர வாழ்வுற்று மகிழவேண்டுமென விரும்புகின்றார்கள். திலீபவேந்தன் காமதேனுவைப் பின்பற்றிச் சென்றதுபோல், காங்கிரஸ் கொள்கையைப் பின்பற்றிச் செல்லவேண்டுமென தேசிய மக்கள் விரும்புகின்றார்கள். இத்தருணத்தில் அதிகாரி வர்க்கத்தினராகிய ஈசனது பரிபூரணமான ஆக்ஷி முறைக்குள்பட்ட தேசங்களைப் பரிபாலிப்பதில் சுதந்தர திருஷ்டி பெற்ற மிதவாத சிங்கமானது சாதாரணஜனங்கள் உள்ளே புகுந்து, அறிய முடியாத ராஜீய விஷய வாதமாகிய குகையில் புகுந்து தேசியமக்கள் தம்மை மனம்போனபடி செல்லவிடமாட்டார்களென்பதை மறந்து,—ஆனால், பாரத புத்திரர்களின் மறுப்பு மொழிகளாகிய பாணங்கள் மாத்திரம் தம்மீது தொடுக்கப்பெறலாமென்பதை யுணர்ந்து, 'என தருமைப் பாரதபுத்ர! உனது தற்பெருமை சுகவாழ்க்கை சுதந்தர ஜீவித இன்பத்தை நீயேன் இழக்க விரும்புகின்றாய்? ஒற்றுமையாமைத் தீர்மானமென்னும் பசுங் கன்றைப பாதுகாக்கவேண்டுமென்பது அவ்வளவு பிரமாதமா? அது அவ்வளவு முக்கியமல்லவே. இனி, காங்கிரஸ் கொள்கை என்னும் ஒரு பசுவைப் போன்ற அற்ப விஷயத்திற்காக மனிதன் தனது சுய நன்மையை இழந்து விடுவதா? தியாகஞ் செய்தல் என்ற பழங்கொள்கை உனக்குச் சாத்யமா? அது எதற்காக? தியாகம் என்று சொல்லிக்கொண்டு நம்முடைய நன்மையை நாம் கவனிக்கவேண்டியது தானே! தற்செயலாக மிதவாத சிங்கங்களின் முன்னணியில்—முன் பக்கத்தில்—மடியில்—'பாரீஸ் லாட்டரி போல்' வந்து விழுந்திருக்கின்ற சட்டசபைஸ்தான உத்தியோகங்களாகிய பசிப உணவை நாங்கள் விட்டுவிட முடியுமா? நாங்கள் அதிகார வர்க்கத்தினரின் நண்பரும் ஊழியருமல்லவா? அதிகாரிகளைத் தாங்கிச்செல்வதே எங்களுடைய வேலையன்றோ? அதிகார சக்தியின் அன்பிற்குரிய இத்தேசத்தில் ஆதிக்கம்பெறுவதற்காகவே நாங்கள் அதிகார தேவதையினால் படைக்கப்பட்டிருக்கிறோமன்றோ? தேசிய வாதிகளால் தள்ளப்பெற்று ஆகவே தெய்வாதீனமாகக் கிடைத்துள்ள பழைய காங்கிரஸ்தீர்மானமாகிய "சட்டசபையில்-ஸ்தானம் ஆதிக்கம்பெறுதல்" என்னும் பசுவை எங்களால் விட்டுவிட முடியாது 'என்றும் கூறுகின்றனர். தேசியவாதிகள் திலீபனைப்போன்று அதற்குக் கூறுகின்ற விடையாதெனின், காங்கிரஸ் என்னும் பசுவானது இந்திய நாடாகிய ஆச்சிரமத்தின் நற்காரியங்கள்குறைவின்றி நடைபெறவும்அதனில்வாழ்கின்ற எளியமக்கள் மனம்வாடா திருக்கவும், விரும்பி காங்கிரஸ் கொள்கையைத் தத்தஞ் செய்தலாகிய பசுவைப்பறிகொடுக்க நாங்கள் மனந்துணியோம். நாங்கள் ஆத்மத்தியாகஞ்செய்து எங்களது உடல்பொருள் உயிர்ஆகிய எல்லாவற்றையும் தத்தஞ்செய்தாலும் செய்வோம். ஆனால்காங்கிரஸ்தீர்மானம் என்னும் பசுவை விட்டு நாங்கள் புறமே செல்லமாட்டோம், என்றுகூறுகின்றனர். கடைசியாக, சிங்கமானது மறைந்து, திலீபவேந்தனும் காமதேனுவினது அருளால் இப்புவிமுழுதையும் ஏக சக்கிராதிபதியாகஇருந்து ஆண்டுவரத்தக்க நற்புதல்வனைப் பெற்றனெனக்காளிதாசன் கூறுவதுபோல காங்கிரஸ் மகாசபையானது செல்வாக்கினால், இந்தியா முழுதையும் சுதந்தரமாக ஆளும் நிலைமை இந்திய மக்களடையப்பெறுவரென்பது இங்கு வெளிப்படையான கருத்தாகும். 33 கோடி தேவர்களால் போற்றப்பெறுகின்ற காமகிரஸானது காமதேனுபசுவைப்போலும், 33கோடி இந்தியர்களால் போற்றப்பெற்று வருகின்றது. ஆகவே பசு, தெய்வீகத்தன்மை பொருந்தியதுபோல காங்கிரஸ் மகாசபையும் தெய்விகத் தன்மை பொருந்தியதாம். பசுக்களை இம்சித்தால் தம்மத அனுஷ்டானங்களில் ஒன்று எனக் கருதிவந்த மகம்மதிய நண்பர்கள், இப்பொழுது பசுக்கள் கொண்டாடுதற்கு உரியன என்ற கருதத் தொடங்கிவிட்டதுபோல் காங்கிரஸ் தீர்மானமும் கொண்டாடுதற்குரியதென அவர்கருதிவிட்டனர். பசுக்கள் ஹிந்துக்களுடையவும் மகம்மதியர்களுடையவும் மதசம்பந்தமான பெருமதிப்பை (முக்கியமாக இத்தருணத்தில்) பெற்றிருப்பதுபோல, காங்கிரசும் இப்பொழுது ஜீவாதாரமான சுதந்தரத்தை நிலைநாட்டுதலாகிய மதசம்பந்தமான மதிப்பைப் பெற்றுவிட்டது. அக்காரணத்தினாலே 'கலிபத்தைப் போன்ற' மதசம்பந்தமான விஷயத்தையும் அது கவனிக்கக் காரணமாயிற்று. இவ்வுரிமைகளை யுணர்ந்த தேசிய வாதிகள், இப்பொழுது காங்கிரஸ் தீர்மானத்தைச் சில சிங்கங்களுக்கு வீணே இரைகொடுக்காமல், காங்கிரஸாகிய காமதேனுவைப் பரிபாலித்தபின்வாயிலாய் தேசியமக்களின் நல்வாழ்க்கையைத் தேடி நன்மையளிப்பார்களென நம்புகின்றோம்.

## சிந்தவனை யுலகம்.

### சொற்ப விஷயமாம்!

பஞ்சாப் படுகொலை, கிலாபத் சம்பவம் முதலிய விஷயங்கள் சில்லரைச் சங்கதிகள் எனச் சமாதானங் கூறி, மிஸ்டர் சாஸ்திரியார், நாம் அவற்றைத் தள்ளிவிடும்படி கூறுகின்றார். ஆயிரக் கணக்கான இந்தியர்களை—ஆயுதபலமும் தற்காப்புத் திறனுமின்றிய—ஏழை இந்தியர்களை அக்கிரம ராணுவ அதிகாரிகள், சுட்டேன்! சுட்டேன்!! நன்றாகச் சுட்டேன்!!! கையிலிருந்த தோட்டாக்கள் தீருமளவரை சுட்டேன்!!!!—'என்று இறுமாப்புடன் கூறிய உண்மை இந்திய தேசாபிமானிகளின் ஹிருதயத்தைப் பிளக்கக்கூடிய 'புன்மொழிகளை—அநாகரிக ராக்ஷஸச் செயல்களை மறந்துவிடவேண்டுமாம். ஆனால் இந்தியாவில் தோன்றிய மனிதப் பதரையன்றி, மற்றுள்ள புருஷத்தன்மை வாய்ந்த ஸ்திரீ புருஷர்கள் எவரும் அக்கொடிய சம்பவங்களை மறந்துவிட முடியாது.

### இப்பொழுது அப்படி என்ன ஆபத்து வந்துவிட்டது?

பிரான்சு தேசத்திய வாலிபர்கள் பள்ளிக்கூடங்களை பகிஷ்காரஞ் செய்துவிட்டதுபோல, நம் தேசத்திற்கு இப்பொழுது என்ன ஆபத்து வந்துவிட்டது? என மிஸ்டர் சாஸ்திரியார் கேட்கின்றனர். உண்மைச்சுதந்தரத்தை யிழந்து பரிதவிக்கும் நிலையில், பத்திரிகைச்சட்டம், பஞ்சாப் ராணுவச்சட்டம், ரௌலெட் சட்டம், தொடாதொழிச் சட்டம், முதலிய சட்டங்கள் அடுக்கடுக்காகச் செய்துவரப்படுமிக்காலத்தில், வந்திருக்கின்ற—விளைந்திருக்கின்ற—ஆபத்துக்கள் கொஞ்சந்தானோ? இதுதேசத்திற்கே ஆபத்தான நிலையன்றோ? 'இது ஆபத்தான நிலையில் சேர்ந்ததல்ல' எனக் கருதித்தான் மிஸ்டர் சாஸ்திரியார் பஞ்சாபசம்பவங்களுக்குப் பரிகாரந் தெரிவிக்கும்படி வங்காளச் சட்டசபையில் வேண்டினரோ? 'தற்கால ஆங்கிலப் பள்ளிக்கூடங்கள் வயிற்றுப் பிழைப்புக்கு போதுமான கல்வியைப் போதிக்கின்றன; ஆதலால் அவற்றை விட்டுவிடவேண்டாம்'என மிஸ்டர் சாஸ்திரியார் கூறமுடியுமா? 'குமாஸ்தாவேலை வேண்டியதுதான், குமாஸ்தாவேலை செய்யாவிடில் தேச நிர்வாகம் நடைபெறுவது எப்படி' என்று,மிஸ்டர் சாஸ்திரியார் கூறுகின்றனர். 'குமாஸ்தாவேலைக்கு வேண்டிய வாலிபர் போக, மற்றுள்ளோர்க்கு' இங்கிலாந்து அமெரிக்காவைப் போன்ற வெளிநாடுகளில் அனுஷ்டிக்கப் படுகின்ற கல்விமுறைதாராளமாகஇந்தியாவில் வழங்கப்படுகின்றதா? அப்படியானல், இந்தியாவை விட்டுப்பற்பல வாலிபர்கள் வருஷந்தோறும் வெளிநாடு செல்வானேன்? 150 வருஷ காலங்களாக பிரிடிஷ் ஆக்ஷிமுறை இந்தியாவில் நிலைத்திருந்தும், ஆயிரக்கணக்கான சம்பளம் வாங்கும் ஆங்கிலேயர்கள் வெளிநாடுகளிலிருந்து தருவிக்கப்படுவானேன்? குழந்தை நிலையிலுள்ள இந்தியர்களை எல்லாக்கலைகளிலும் பயிற்சிசெய்துவைத்தற்கு 150வருஷகாலங்கள் போதவில்லையோ? ராஜபாஷையாகிய ஆங்கிலப்பள்ளிக் கூடங்களுக்கு முக்கிய அடையாளம் மேஜையும், நாற்காலியும் சில படங்களுந்தானோ? இந்தியாவிலே பிறந்த புராதன நாகரிக தெய்வ பாஷையாகிய ஸம்ஸ்கிருதக் கல்வியில் உயர்தரக் கல்வி கற்பித்தலைக்கூட இங்கிலாந்தில் தான் கையாளவேண்டுமோ? இதுபோன்ற அநாவசியச் செலவுகளுக்கு இடமின்றி, நம்முடைய ஜீவாதாரமான கல்வி முறையில் இனியும் நாம் ஏமாற்றமடையாமல் விழித்துக்கொள்வோமென்று இந்தியர் முயற்சித்தால் அது பரிகாசத்திற்குரிய விஷயந்தானோ?

### இப்பொழுது தயார்தானா?

'இப்பொழுது தேசியக் கலாசாலைகள் தயார் தானா? அப்படியானல் இந்திய வாலிபர்கள் பள்ளிக்கூடங்களைப் பகிஷ்காரஞ் செய்யட்டும்' என்று கனம் சாஸ்திரியார் கூறுகின்றனர். இந்தியர்கள் தமது கல்வியபிவிருத்தி முதலிய சுய முன்னேற்றத்தின்பொருட்டு கோடிக்கணக்கான வரிப்பணத்தைசெலுத்திவரும்பொழுது அவர்களின்நன்மையைநிறைவேற்றாமல் ஒரு சில அதிகாரவர்க்கத்தினர் நடந்து வந்திருப்பதை மிஸ்டர் சாஸ்திரியார் அறிந்து வந்திருந்தும்—ஸ்ரீ சாஸ்திரியாரின் குருஸ்தான மரியாதைகளுக்குரிய காலஞ் சென்ற ஸ்ரீமான் கோகலே' கொண்டுவந்த கட்டாயக் கல்வி மசோதா. திருப்பிவிடப்பட்ட சம்பவத்தை மிஸ்டர் சாஸ்திரியார் அறிந்திருந்தும்—'நீங்கள் தேசியக் கலாசாலைகளை ஸ்தாபித்து மாணக்கர்களைச் சேர்க்கத் தயாராயிருக்கிறீர்களா' எனக் கேட்பதன் கருத்தென்ன? மிஸ்டர் சாஸ்திரியாரைப்போன்ற வாக்கு வல்லமையுடையவர்களும் மேதாவிகளும் 'தேசிய வாதிகளின் கருத்திற்கிணங்கி, அதிகாரிகளின் ஜாடை உபசார வலைகளுக்கு உட்படாமலும், விருந்து முதலானதை விரும்பாமலு மிருந்துவந்து 'தேசிய மக்களின் கருத்துப்படி நியாய அபிவிருத்தி முறையில் 'வேண்டிய வேலைகளைச் செய்து 'என்று திரும்பியிருந்தால், தேசியக் கலாசாலைகள் இப்பொழுது இவ்வளவு எண்கள் வரை தயாராகிவிட்டன? என்று கூறுவதில், மிஸ்டர் சாஸ்திரியாரே முக்கிய உரிமை பூண்டு விளங்கியிருப்பார்!

### குற்றத்தை உணர்ந்திருக்கிறார்களாம்!

பஞ்சாப் சம்பவத்தின் குற்றச்செயல்களை கவர்ன்மெண்டார் உணர்ந்திருக்கின்றார்கள் என மிஸ்டர் சாஸ்திரியார் சொல்வதைக்கேட்க, நமக்குப் பெரிதும் ஆச்சரிய வுணர்ச்சியுண்டாகின்றது. கவர்ன்மெண்டார் அக்குற்றங்களை யுணர்ந்திருக்கற்கு அடையாள மென்ன? இந்தியப் பணத்திலிருந்து ஜெனரல் டயருக்கு 700 பவுன் உபகாரச் சம்பள மளிப்பதும், தொடாதொழிச் சட்ட மேற்படுத்தியும், மிஸ்டர் சாஸ்திரியாரின் தீர்மானங்களை வாபஸ் வாங்கிக் கொள்ளும்படி செய்ததுந்தானல்லவா?

## எஷர்கமிட்டியின்யாதாஸ்து.

இந்தியச் சைன்யத்தின் பிற்கால நிலைமையை எவ்விதம் சீர்படுத்த வேண்டும் என்று யோசனை சொல்வதற்காக நியமிக்கப்பட்ட எஷர் கமிட்டியானது ஒரு விரிவான ஆராய்ச்சி செய்து தனது யாதாஸ்தை வெளியிட்டிருக்கின்றது இந்திய ராணுவச் செலவுகள் வருடந்தோறும் பெருகி இப்பொழுது "வரி செலுத்தும் இந்தியர்களின் பேரில் மிகுந்தபளுவை சுமத்திவருகின்றதென்று நாம் மித்திரனில் பன்முறையும் கூறியுள்ளோம்:

இந்தியாவுக்கு ஏகாதிபத்தியத்திலடங்கிய, இதர குடியேற்ற நாடுகளைப் போல் சமத்துவமான சுதந்திரம் கொடுப்பதாகச சொல்லிவரும் இக்காலில் இந்தியாவினுடைய வருமான நிலையையும் அதன் அபிவிருத்தியின் பொருட்டு செலவிடப்படவேண்டிய பல இனங்களையும் முறையே இந்தியாவை ஆட்சிபுரியும் பிரிட்டிஷாரும் மற்றுமுள்ள அதிகார வர்க்கத்தினரும், நன்கு அறிந்திருக்கின்றனர். அவ்விதமிருந்தும் அவர்கள்இந்திய ராணுவத்தை ஏகாதிபத்தியத்திற்கு உட்படுத்தி இந்திய அரசாங்கத்திற்கு யாதொரு அதிகாரமுமில்லாமல் செய்திருப்பதை ஆலோசிக்கும் பொழுது இந்தியாவின் சுதந்திரத்திற்கு அடிப்படையான பாகம் எடுபட்டுப்போனதென்றே சொல்லலாம். இக்காலத்தில்கம்மிஷன்கள் கூட்டப்படுவது அதிகார வர்க்கத்தினரின் உத்தேசத்தை நிறைவேற்றுவதற்காகவேயன்றி, உண்மையில் பொதுநன்மையை உத்தேசித்து பொதுஜனப்பிரதிநிதிகளின் ஆலோசனை கருத்துக்கேற்ப நியமிக்கப்படுவதில்லையென்பதை இதற்குமுன் நடந்த ஒவ்வொரு விஷயங்களின் மூலமாயும் இந்தியர் நன்கறிவர். உதாரணமாக தற்காலம் எஷர்கமிட்டியார் மூன்று விதமான கொள்கைகளை ஆதாரமாகக்கொண்டு இந்தஅறிக்கை தயார்செய்திருக்கின்றனர். அவையாவன: 1. இராணுவகாரியங்களில் இந்தியாகவர்ன்மெண்டைக் கட்டுப் படுத்துவதாம். 2. ஏகாதிபத்தியத்தின் பாதுகாப்பு சம்பந்தமாய் ஏகாதிபத்தியத்திற்கு இந்திய ராணுவத்தில் ஒரு அதிகாரம் வேண்டும். 3. பிரிட்டிஷ்ஏகாதிபத்தியஇராணுவகாரியாலயத்தின் அதிகாரவரம்புக்குட்பட்டு இந்தியராணுவத்தைச் செலுத்த வேண்டும். மேற்குறித்த கொள்கைகள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பாதுகாப்பிற்குச் சாதகமேயன்றி வேறல்ல. இம்மாதிரிக் கொள்கைகளை அனுஷ்டிக்க வேண்டுமென்று வெகுகாலமாக எண்ணம் கொண்டு இந்தியராணுவம் நடத்தப்பட்டு வந்திருக்கிறதென்பதற்கு, அறிகுறியாக, ஈஜிப்டிலும், பாலஸ்தீனிலும், தற்காலம், மெசபொடோமியா முதலிய இடங்களிலும் இந்தியர்கள் போர்புரியவும், பாதுகாக்கவும் ஏற்படுத்தப்பட்டார்களென்றுசொல்லலாம். இனி' "ஏகாதிபத்தியத்தின் பாதுகாப்பென்பது, பிரிட்டிஷ் பாதுகாப்பென்று அர்த்தமேயன்றி ஏகாதிபத்தியத்திற்குட்பட்ட நாடுகளின் பாதுகாப்பென்பதாகக்கூற முடியாது. பிரிட்டிஷாரின் தனிப்பாதுகாப்பிற்காக இந்தியர்கள் வரிசெலுத்துவதென்பதும் இனி முடியாதகாரியம். 1858ஸு பிரிட்டிஷ் பார்லிமெண்டில் மிஸ்டர் கிளாட்ஸ்டன் "இந்திய இராஜப்பிரதிநிதிக்குட்பட்டு இந்தியராணுவத்தைஅமைத்தல் வேண்டுமென்று" கொண்டுவந்த ஓர் தீர்மானம் அப்பொழுதே நிறைவேற்றப் பட்டிருக்கிறது.

அதற்கு விரோதமாக, தற்கால பிரிட்டிஷ் ராணுவத் நிர்வாகஸ்தர்கள் பிற நாடுகளில் கண்ணோட்டமிடவும், பிரிட்டிஷ் முதலாளிகள் பிறநாட்டுப் பொருளாதாரத்தைக் கவர்வதில் ஆசை கொள்ளவும் நேர்ந்திருப்பதால், இம்மாதிரி ஓர் விநோதஆலோசனை நிகழ்ந்திருக்கிறதென்றே சொல்லலாம். ஆனால், ஆசியாவின் மேல்பாகத்தை பிரிட்டிஷார் ஆளுவதற்கு இந்திய மனிதர்களும் இந்தியப்பணமும் எங்ஙனம்உதவிசெய்யக் கூடும்? என்று கேட்க நமக்கு உரிமையுண்டு, என்றாலும், எஷர்கம்மிட்டியின் அறிக்கையின் பிரகாரம் பிரிட்டிஷ் ராணுவஅதிகாரிகள் இந்திய ராணுவத்தை நடத்திவிடுவார்களென்பதுமாத்திரம் நிச்சயமாகிவிட்டது. அவசரகாலங்களில்இந்தியாராணுவத்தை உபயோகிக்கவேண்டியிருப்பின், இந்தியாமந்திரிக்கு அறிவிக்கப்பட்டு அதன் மேல் நடத்தப்படுவதாயிருந்தாலும் பிரிட்டிஷ் ராணுவசபையாரின் அபிப்பிராயங்களை ஆட்சேபனை செய்ய இந்தியா மந்திரிக்கு அதிகாரமில்லை. இந்தியா மந்திரிக்கே அதிகாரமில்லாமலிருக்கிற ஓர் விஷயத்தைப்பற்றிஇந்திய ஜனபிரதிநிதிகள் என்னசொல்லக்கூடும்? இதுவரை ராணுவ சம்பந்தமாய் நடந்தும் ஒவ்வொரு சங்கதிகளும் இந்தியஜனப்பிரதிநிதிகளுக்கு எங்ஙனம் தெரிவிக்கப்படாமலிருந்தனவோ அங்ஙனமே பிற்காலத்திலுமிருந்து வரும். மேற்படி கம்மிட்டியில் நியமிக்கப்பட்ட இரண்டு மெம்பர்களும் 'இந்தியர் என்ற நிலைமையில், "இந்தியாவைப் பாதுகாப்பதற்கு இந்தியர்களே தேவை" யென்பதை அறிந்திருந்தும் (அவ்விருவர்களில் ஒருவராகிய) ஸர் கிருஷ்ணகுப்தா என்பவர், இந்தியாவின் தற்கால ராணுவச் செலவை சிறிதும் மறியாமல்இன்னும் ஜாஸ்தியான செலவுகளுக்குக் காரணமான ராணுவத்திட்டத்தை அங்கீகரித்திருப்பதும். (மற்றொருவராகிய)ஸர் உமார்ஹயத்கான் "இந்தியாவில் கலகங்கள் மிகுதியாயிருப்பதாயும் அதற்கு பிரிட்டிஷ் ராணுவப்படைகளை ஏராளமாய் நியமிக்கவேண்டு மென்றும் அதற்கு ஏற்படும் செலவுகளைக் கவனிக்கக்கூடாதென்றும் ராணுவத்தில் சேர்க்கப்படுபவர்கள்பிரிட்டனிடத்தில் பக்தி யுடைவர்களா யிருக்கவேண்டுமென்றும் பொருள் கொள்ள' எழுதியிருப்பதை நோக்கும்பொழுது, அவ்விருவர்களும் 'இந்தியர்கள், என்ற பெயருடன் ஏகாதிபத்தியத்தின் சார்பாக எழுதியிருக்கின்றார்களென்பது சொல்லாமலே விளங்கும்.

ஏற்கனவே "ஹவுல்தார்" "மேஜர் ரிசல்தார் மேஜர்" என்றஇந்திய உபர்பதவிகளுக்கு மேம்பட்ட ராணுவப்பதவிகளை, இந்தியர்களுக்கு அளிப்பதில் பிரிட்டிஷார் இதுகாறும் உடன்படவில்லை. இனிமேலும் உடன்படப்போவதில்லை யென்பதையும் இந்தியர்கள் நன்கு அறிவர்.

ஆகையால், இந்தியாவின் தற்கால நிலைமையை உத்தேசிக்கும்பொழுது, இந்த அறிக்கையின்படி ஏற்படுத்தப்பட்டிருக்கிற திட்டமானது நிறைவேற்றப்படுமாயின், இந்தியாவின் பிற்கால கதியைக்குறித்து நாம் ஒன்றுமே சொல்லவேண்டுவதில்லை. தற்காலம் ஜனங்களுக்கு முக்கியமான செலவுகளைக்கூட நடத்திச் செல்வதற்கு மார்க்கமில்லாமல், அதனால் பொது ஜனங்கள் நோய்வாய்ப்பட்டு லட்சக்கணக்காய் இறந்து போகும் நிலைமையி லிருக்கும்பொழுது, மேற்படி திட்டம் நிறைவேற்றப்படுமாயின், இந்தியப் பொருளாதாரம் மிகுதியும் பாதிக்கப்படுமென்பது விளங்கும்.

## நாட்டுக்கோட்டை நகரவியாபாரச் சங்கத்தொகுதி.

சென்னை மாகாணச் சட்டசபையில் சென்னை நாட்டுக்கோட்டை நகரத்தார் வியாபார சங்கத்தொகுதிக்காக ஒரு ஸ்தானம் ஒதுக்கிவைக்கப்பட்டிருப்பதை, பன்முறையும் எழுதியுள்ளோம். இதுவரையில் ஸ்தானத்திற்கு அபேக்ஷகர்களாக நகரவைசியர்களில் பலர் முன்வந்திருப்பதாகத்தெரியவில்லை. இன்று ஒரு நிருபர்மூலம் கிடைத்த விபரத்திலிருந்து, கானாடுகாத்தான் ஆனாபீனா ராவ்சாஹேப் மு சித முத்தய்யா செட்டியாரவர்கள் அபேக்ஷகராய் நிற்கின்றனரென்று கேள்விப்படுகின்றோம்.

## அடக்குமுறையே கலகத்திற்கு மூலகாரணம்.

அமெரிக்கா வாசியாகிய ஜெ டி. ஸண்டர்லாண்ட் என்பார், 'மாடர்ன் ரிவ்யூ' என்னும் பத்திரிகையில், மேற்குறித்ததலைப்பெயரிட்டு ஓர் வியாசம் எழுதியுள்ளார். அதன் ஸாரமாவது:—

அமெரிக்கா தேசத்துப் பிரசிடெண்ட் வில்சன், 1919ம் வருஷம் டிசம்பர் மாதத்தில் அமெரிக்கன் காங்கிரஸ் மகாசபைக்கு எழுதிய கடிதத்தில் 'அடக்கு முறையே கலகத்திற்கு மூலகாரணம்' என வற்புறுத்தியிருக்கின்றார். தற்கால ராஜீய-சமூக-நிலைமைக்கு மேற்குறித்த வார்த்தைகள், சரியானதென்றே சொல்லலாம். நம் தேசமோ-சமூகமோ - தற்காலம் அடைந்திருப்பது போன்ற நிலைமைக்கு எப்பொழுதும் வந்திருந்ததில்லை. இதனுண்மையை அனுபவசாக்ஷியமாயுள்ள தேசசரித்திரத்தால் கண்டறியலாம். உதாரணமாக, பிரிட்டனுக்குச் சொந்தமாயிருந்த அமெரிக்கா தேசத்துக் குடியேற்ற நாடுகளில் நடைபெற்ற, ராஜீய—சமூக—தொந்தரவுகளை யடக்குவதற்கு, 'அடக்குமுறைகளே ஏற்ற சாதனமென்'' அக்காலத்திலுள்ள மூன்றாவது ஜியார்ஜ் மன்னர் கருதியிருந்தார். முடிவில் தாம், அது தவறெனத் தெரிந்துகொண்டார். அமெரிக்காவில் 1776ம் வருஷத்தில் கையாளப்பட்ட அடக்குமுறைகளின் பலாபலனையும், சென்ற நூறு வருஷங்களாக அயர்லாந்தியர்களை அடக்கி வருவதாலுண்டான பிரயோஜனத்தையும் பிரிட்டிஷ்காரர்கள் தெரிந்து கொண்டதோடு, அத் தேசிய வாதிகளின் பிடிவாதத்தையும் நன்கறிந்துகொண்டனர். இது போலவே ஆஸ்திரியர்கள் இத்தாலியாரை அடக்க முயன்றும், அது பயன்படாமல் இந்த நிலையடைந்தது. ருஷ்யாவிலும் அடக்கு முறை காரணமாக ஏற்பட்ட சம்பவங்கள், உலகத்தில் எக்காலத்திலும் ஞாபகத்திலிருக்கும்படியான ஓர் உதாரணமாக விருக்கின்றன. சென்ற சில கால அனுபவத்திலிருந்தும், அடக்கு முறைகளே கலக மூண்டாக்கும் கருவிகளென எல்லோரும் அறிந்து வருகின்றனர். தற்காலத்திலேற்படும் கலகங்கள் அடக்கு முறையால் அடக்கப் படுகிறதே யன்றி, அவற்றின் ஆவேகம் தணியுமாறுசெய்யப்படுவதில்லை. ஆதலால் இனி காலக் கிரமத்தில், அவ்வாவிருத்தியடைந்து, வெகு காலமாக உள்ளுக்குள் எரிந்துகொண்டிருந்த எரிமலை வெளிக்கிளம்புவதுபோல, திடீரென வெடித்து, அடக்குமுறையை அனுஷ்டித்த கவர்ன்மெண்டின் அடிச்சுவடுகளை அடித்துக்கொண்டு போகுமெனக் கூறலாம். இந்தியர்கள் தாம் சுதந்தரமாக வாழவும், சுயநிர்ணயம் செய்துகொள்ளவும் இடமின்றி நடத்தப்படுவதிலிருந்தும், பிரிட்டன் இந்தியர் மூலம் ஒரு பாடம் கற்றுக்கொள்ளலாம். இந்தியர்கள் சீர்திருத்தத்திற்காகச் சண்டையிடும்பொழுது, அவர்களின் கஷ்டத்தை அதிகாரிகள் நிவர்த்தி செய்யாமல மேன்மேலும், ராணுவச்சட்டம், ரௌலெட் சட்டம் போன்ற கொடுஞ்சட்டங்களை ஏற்படுத்தியும், கௌரவமுள்ள மனிதர்களை ஜெயிலிலடைத்தும், விசாரணையில்லாமல் பலரைத் தேசப்பிரஷ்டம் செய்வித்தும், ஆயுதமின்றிய ஸ்திரீகள் குழந்தைகள் ஆகிய இவர்கள் சமாதானத்துடன் கவர்ன்மெண்டினிடம் கேட்டுக்கொள்ளும்போது பிரிட்டிஷ் ஆபீஸர்கள் விவேகமின்றி நடத்தியும் வந்த செயல்கள் சொல்லத்தரமன்று. ஆனல் அமெரிக்கன் குடியேற்றநாடுகளும் அயர்லாந்தும், கடந்துகொண்ட பான்மையினின்றாவது இங்கிலாந்து ஒரு பாடம் படித்திருக்கலாம். அல்லது பிரான்சு, ஆஸ்திரியா, ருஷியா, இத்தாலி போன்ற தேசங்கள், அடக்குமுறையை உபயோகித்ததன் காரணமாக, அத்தேசங்களடைந்த கதியினின்றுமாவது தெரிந்துகொண்டிருக்கலாம். ஒரு கவர்ன்மெண்டின் தீர்மானமானது ஜனங்களுடைய தீர்மானத்தின பேரிலல்ல. உணர்ச்சியால் மாத்திரம் பாதுகாக்கப்படவேண்டும். அடக்குமுறையைக் கையாண்ட ஒருஅரசாங்கத்தினிடத்தில் அன்பு செலுத்தியவர்களும் பக்தியுடையவர்களும் அது செய்யும் அநீதியைக் கண்டு, பிற்காலத்தில் துவேஷிக்கத் தொடங்குகின்றனர்- குற்றத்திற்காகத் தண்டிக்கப்படாமல், அபிப்பிராயத்திற்காகத் தண்டிக்கப்படுவோர், அரசாங்கத்தில் வைத்த அன்பைவிட்டு, துவேஷங்கொள்ள நினைக்கின்றனர். இவ்விதம் அரசாங்கத்தாரால் கஷ்டப்படுத்தப்படும் ஒரு நபரின் நண்பர்களும், சுற்றத்தார்களும்,அபிமானிகளும் சேர்ந்து அவ்வரசாங்கத்தினிடம் கஷ்டப்படுவோரின் கொள்கையையே யனுசரிக்க வாரம்பிக்கின்றனர். 'அடக்குமுறையானது கவர்ன்மெண்டினிடம் ஜனங்களுக்குள்ள மதிப்பை மாத்திரம் கெடுப்பதல்ல. அரசாங்கத்தின் சத்துருக்களிடமும் இவர்கள் அனுதாபங் காட்டத் தொடங்குகின்றனர். மூன்றாவது அடக்குமுறையானது பலாத்காரத்திற்கும் இடங்கொடுக்கிறது. எந்த அரசாங்கம் ஜனங்களின் தேவைகளை காதுகொடுத்துக்கேட்க மறுக்கின்றதோ, பகிரங்க விசாரணைசெய்ய மறுக்கின்றதோ, தொழில் தேசிய விஷயங்களிலுண்டாகும் அதிருப்தியை யொழிக்க இயந்திர பீரங்கியையும், போலீசாரையும் ஏவுகின்றதோ, சீர்திருத்தக்காரரையும், ராஜீய வாதியையும் ஜயிலிலடைக்க நினைக்கின்றதோ, அக்காலத்தில் அந்த ராஜாங்கத்தில் நியாயத்திற்கும், காரணத்திற்கும் பதிலாக பலாத்காரமும், ஹடமும் ஏற்படுகின்றன. ஜனங்கள் மாத்திரம் பலாத்காரத்தைஉபயோகிக்கிறார்களென்று சொல்வதற்கில்லை, கவர்ன்மெண்டார் உபயோகிக்கும் அடக்குமுறைகளும் ஓர்விதமான பலாத்காரமென்றே சொல்லவேண்டும். இவ்விதம் கவர்ன்மெண்டார் செய்யும் பலாத்காரங்களால் ஜனங்கள் பகிரங்கமான கிளர்ச்சியைவிட்டு ரகசியமாக சதியாலோசனை செய்யவாரம்பிக்கின்றனர். கலகக்காரர், தேசிய—சமூக சம்பந்தமான விஷயங்களில் ஜனங்களைக்கொண்டு ஏதேனும் அக்கிரமங்கள் செய்யவாரம்பித்தால் அவற்றால் அநேக கஷ்டங்களுண்டாவதை யறிந்து அவர்களே பலாத்காரத்தை விட்டு விடுவார்கள். அமெரிக்காவிலும் உலகத்திலுள்ள மற்ற தேசங்களிலும் முறையே கிளர்ச்சிகளும், அமைதியின்மையும் ஏற்படுமாயின், அதற்கு என்ன பரிகாரம்:செய்வீர்களென்று இவற்றை எழுதுவோரிடம் கேட்குமிடத்தில் 1848ம் வருஷத்தில் பிரான்சு மந்திரி சபையில் கொண்டிடாகு வில்லி நடந்துகொண்டதையே, இதை எழுதுபவர் யெடுத்துக் காட்டுவார். அக் காலத்தில் அவர் பிரான்சு ஆக்ஷிமுறையால் யேற்பட்ட கஷ்டங்களைப் பற்றிச்சொல்லும் போது "பிரான்சுக் காரர்களாகிய நாம், எரிமலையின் மேல் படுத் துறங்குகிறோம். கடவுளுக்குப் பொதுவாக கவர்ன்மெண்டின் கொள்கைகளை மாற்றிக்கொள்ளுங்கள் கவர்ன்மெண்டின் தற்கால அநுஷ்டான முறை நாசத்திற்கு ஏதுவாயிருக்கிறது" என்று கூறியிருக்கிறார்.

1848 ம் வருஷத்தில் பிரான்சு கலவரத்தில் டிடோகவில்லி இம் மாதிரி பேசி அக்காலத்திலிருந்த லூயிபிலிப் என்ற அரசனை சிம்மாசனத்திலிருந்தும் விலகும்படி செய்யக்காரணமாயிருந்தது. அக் காலத்தில் ஜனங்களின் மனக கொதிப்பை யடக்க கவர்ன் மெண்டு மாறுதலே ஏற்ற கருவியாயிருந்ததேயன்றி அக் கிளர்ச்சிக்காரர்களை யடக்க அடக்கு முறைகள் சாதகமாயிருக்கவில்லை. சில நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த பேகன் என்பாரும "அராஜகமும், தொந்தரவும், என்ற புஸ்தகத்தில் ராஜதுரோகத்தையடக்குவதற்கு, அதற்குரிய காரணங்களை யறிந்து நடப்பதே சாவதானமான பாதையாகும்; தீப்பிடிப்பதற்குச்சாதகமாக விறகு சேகரித்து வைத்திருந்தால் தீப்பொறிகள் எப்பொழுது இவற்றை யடைந்து தீப்பற்றிக்கொண்டது என்பதைச் சொல்லமுடியாது" என்று சொல்லியிருக்கிறார் காரியத்திற்குரிய காரணங்களை விலக்கவேண்டுமே யல்லாது, காரியத்திற்காகச்சண்டையிடுதல் நன்றன்று என்பது லார்டுபேகன் என்பாரின் அபிப்பிராயமாகும் ரால்ப்வால்டோ எமர்ஸன் என்பார் ராஜீய விஷயங்களென்ற புத்தகத்தில் "மூடர்களாகிய நாம் பலவந்தத்தையே சிறந்த ஆயுதமாகக் கொண்டிருக்கிறோம். துவேஷம், துவேஷத்தை எங்ஙனம் வளர்க்குமோ, அதுபோல பலவந்தமும் பலவந்தத்தையே வளர்க்குமென்று நாம்கருதவேண்டும்" என்றெழுதியிருக்கிறார் இந்தியாவிலுள்ள பிரித்தானியர்களும் ஐயர்லாந்திலுள்ள பிரித்தானியர்களும், அமெரிக்கர்களும், உலகத்திலுள்ள மற்ற எந்தேசத்தினரும் கலகமுற்ற தேசத்திலுள்ளவர்களை நல்ல ஸ்திதியிலாக்குவதற்கு,பிரசிடெண்ட்வில்சன் சொல்லியபடி அடக்குமுறையே கலகத்திற்கு மூலகாரணம் என்ற வார்த்தைகளை உண்மையென உணர்ந்து, ஜனங்களின் உணர்ச்சியின்படி தாராளமாக நடந்துகொள்வதே நன்மையதாகும்.

## பொது வர்த்தமானம்

### தேவகோட்டை டிவிஷனல் ஆபீஸரின் முகாம்.

இம்மாதம் 13உ சோழபுரம் முகாம், 13உ யிலிருந்து 16உ வரை அவ்வூரிலேயே தங்கியிருப்பார், 17உ திரும்ப தேவகோட்டை வருகிறார். 25உ திருப்பத்தூர்முகாம், 26உயிலிருந்து 30உ வரை திருப்பத்தூரிலேயே தங்கியிருப்பார். 31உ தேவகோட்டை திரும்பிவருகிறார்.

### கண்டனூர்
5-10-20

காலநிலை:- போதுமான மழை பெய்திருக்கின்றது.
நீர்நிலை:- கண்மாய் குளங்களில் சுமார்5, 6 மாதங்களுக்குப் போதுமான தண்ணீர் நிறைந்திருக்கின்றது. 2 3 நாட்களாக மாலை 5 மணிக்கு மழை ஆரம்பித்து முறையே 10 மணிக்கு நின்று விடுகின்றது. அதனால் ஜனங்களுக்கு சிரமமில்லை.

### புதுவயல்.
28—9—20

இங்கு வெற்றிலை வியாபாரிகள் சந்தையில் ஒரு முட்டி இரண்டு ரூபாய்க்கு வாங்கி அன்று சாயந்திரமே மூன்று ரூபாய்க்கு விற்கிறார்கள். இவ்விதம் வியாபாரிகளெல்லாரும் ஒன்றுசேர்ந்து விற்பதால் ஏழை ஜனங்கள் பாடுதான் கஷ்டமாயிருக்கிறது. இதை மேலதிகாரிகளும் நகரத்தார்களும் கவனிப்பார்களாக.

### சிவகங்கையில் ஸ்ரீனிவாசசாஸ்திரியார்

கனம் ஸ்ரீநிவாசசாஸ்திரியா ரவர்கள் 2-10-20ல் சிவகங்கைக்கு விஜயஞ்செய்து இரண்டு தினங்கள் பலவிஷயங்களைப் பற்றிப் பிரசங்கஞ்செய்தார்.

### சிவகங்கை கோகலேஹாலில் பிரசங்கம்
(சிவகங்கை நிருபரிடமிருந்து)

கனம், ஸ்ரீநிவாசசாஸ்திரியாரவர்கள், 2—10—20ல் சிவகெங்கைக்கு விஜயஞ்செய்து இரண்டுதினங்கள் பலவிஷயங்களைப் பற்றிப்பிரசங்கஞ் செய்தார்கள். வக்கீல்களால் வந்தனோபசாரங் கூறப்பெற்றது. கனம் சாஸ்திரியாரவர்கள் மிஸ்டர் முகுந்த ராஜய்யங்கார் அவர்களின் விருப்பத்திற்கிணங்க விஜயஞ் செய்தனராம் 4—10—20ந் தேதியன்று மேற்படி ஹாலில் இவ்வூர் வக்கீல் மிஸ்டர் எம். எஸ். ராமஸ்வாமி அய்யரவர்களின் 9 வயதுள்ள பெண்மணியால் காலை 9 மணிக்கு வீணை வாத்தியமும் பாட்டுக்கச்சேரியும் நடத்தப்பெற்றது.

## பிழைதிருத்தம்.

I

சென்றவாரம் மித்திரனில் மதிப்புரை கூறப்பெற்ற 'பஞ்சாப்படுகொலை ஏப்ரல் 1919' என்ற புத்தகத்தின் விலை, 1—8—0 என்றிருப்பதை 2—0—0 என நேயர்கள் திருத்திக் கொள்ளுமாறு விரும்புகின்றோம்.

II

27-9-20ல் வெளியான மித்திரனின் 7ம் பக்கத்தில் "ஆச்சரியாக்கினம்" என்ற தலைப்பெயரின் கீழ், வைரங்களின் வரலாற்றை அறிவிக்கும்போது "கோஹினூர்" என்ற வைரத்திற்காக மூன்று தம்பிமார்களையும் கொன்று, ஒரு தகப்பனையும் ஜயிலிலடைக்க நேரிட்டது என்ற வாசகங்களை பின் வருமாறு திருத்தி வாசித்துக்கொள்ள வேண்டுமென அதை யெழுதியவர் சொல்லுகிறார். அதாவது:- "மூன்று சகோதரர்களைக் கொன்று தகப்பனையும் சிறையில் வைப்பதற்கு கோஹினூர் என்ற வைரம் மாத்திரம் காரணமல்ல; வேறுசில வைரங்களுங் காரணங்களாய் இருக்கலாம்" என்பதே.

## பண்டிட் கோபாலாச்சார்லுவின் அகால மரணம்

சென்னையில் ஒரு உயர்தர ஆயுர்வேத கலாசாலை ஸ்தாபித்துத் திறமையாய் நடத்தி வந்தவரும் இந்திய ஆயுர் வேதத்தைப் பிரசாரஞ் செய்வதில் பேராவல் கொண்டு பற்பல மகாசபைகளை நடத்தினவருமாகிய ஸ்ரீமான் பண்டிட் ஆயுர் வேத மார்த்தாண்ட பிஷங்மணி கோபாலாச்சார்லு அவர்கள், சென்ற செப்டம்பர் மீ 29ந் தேதி காலையில் பிளவை நோயால் பிராண வியோக மடைந்துவிட்டதைக் குறித்துப் பெரிதும் விசனிக்கின்றோம். மிஸ்டர் ஆசார்லுவின் மரணம் நம் தென்னாட்டைப் பொருத்த மட்டில் ஆயுர்வேதப் பிரசாரத்தைப் பெரிதும் பாதித்து விட்டது எனக்கூறவேண்டும்.

## ஸர் C. சங்கரநாயர்.

இந்த மாதத்தின் மத்தியில் சர் ஸி சங்கரன்நாயர் அவர்கள்இங்கிலாந்தை விட்டுப் புறப்படுகிறார். அவர் நாகப்பூர் காங்கிரஸிற்கு வருவாரெனத் தெரியவருகிறது.

## இளவரசப் பெருமானும் இந்தியராஜப்பிரதிநிதிஸ்தானமும்

தற்காலம் நமது இளவரசர் கடற் பிரயாணம் செய்துகொண்டிருக்கிறார். அவர் இங்கிலாந்து போய்ச் சேர்ந்ததும் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் அவருடைய மனதைக் கலந்துகொண்டு ஒருக்கால் அவரையே இந்திய ராஜப் பிரதிநிதியாக நியமிக்கக் கூடுமோ எனக் கருதப்படுகிறதாம். இந்த நியமனம் உறுதிப்படுமாயின் (இளவரசர் கொஞ்ச காலச்சிரமப்பரிகாரத்தின் பொருட்டு) இப்பொழுது இராஜப் பிரதிநிதியாயிருக்கும் லார்டு செம்ஸ்போர்டு இன்னும் ஒரு வருஷகாலம்வரை உத்தியோகம் வகிப்பார். "முன்னர், இளவரசர் பெருமான் இந்தியாவுக்கு விஜயஞ் செய்யப் போவதாய்'க் கூறப் பெற்று மீண்டும் நிறுத்திப் போடப் பட்ட செய்தியைப் போல, இவ்வதந்தியும் மாறிவிடாமல் உண்மையாகுமானல், இந்தியர் மனம் பெரிதும் சந்தோஷம் பெறும். ஆனல் சேம்ஸ்போர்டு பிரபுவின் ஆட்சிமுறை நீளுவதைக் குறித்தும் இந்தியர் மனம் வருந்தும்!

(ஆறாம் பக்கம் 4 பத்தித் தொடர்ச்சி)

திமான்களும் இதைப்பற்றிப் பிரசாரஞ்செய்கிறார்கள். அவர்கள் எல்லோரும் சிறந்த தேசாபிமானிகள் ஊக்கத்தோடு வேலை செய்பவர்கள் ஆனல் அவர்கள் உங்களிடம் சமீபத்தில் வருவார்கள். அவர்கள் உங்களுடையஓட் சுதந்தரத்தைஒருவருக்கும்கொடுக்கவேண்டாம் என்று சொல்வார்கள். ஆனல், நீங்கள்மனச்சாக்ஷியை மதித்து,தேசத்திற்கு நன்மை செய்யக்கூடியவர்கள் என்று நீங்கள் யாரைக் கருதுகிறீர்களோ அவர்களைத் தெரிந்து ஓட் சுதந்தரத்தைக் கடைசியில் உபயோகியுங்கள் அவசரப்பட்டுச் சிலருக்கு வாக்களித்து விட்டதாகக் கூறிவருந்தாதீர்கள். எவ்வளவு பேர் அபேக்ஷகர்களாக முன் வருகின்றார்களென்பதை நிதானித்து, கடைசியாக உங்கள் மனச்சாக்ஷிப்படிசெய்யுங்கள்: இந்த முக்கியமான தருணத்தில், ஒற்றுமையாமையை மாத்திரம்கைக்கொண்டால் நன்மையடைந்துவிடலா மென்பதை மறந்துவிடுங்கள், தினம் 1க்கு 15 கோடி ரூபாய வீதம் செலவிட்டு யுத்தஞ் செய்து சமாளித்துப் பெருந்த கஷ்டநஷ்டங்களுக்குட்பட்ட பிரிட்டிஷார், இங்கிலாந்தில் இப்பொழுதுரூபா1க்கு12அணு வீதம்அதிகவருமான வரி போட்டு வருகிறார்கள். பிரான்ஸில் இதனிலும் பன்மடங்கு துன்பப்படுகின்றனர். ஆஸ்திரியா ஜெர்மனியிலோ படுந் துன்பம் சொல்லித் தொலையா. அங்கு குழந்தைகளுக்குப் பாலின்றி காசநோயால் அவை வருந்துகின்றன. ஆதலால் உலகத்தில் கஷ்டப்படாத தேசங்களேயில்லை. இப்பொழுது அதிகாரிகள் நமது கோபத்தைக் கண்டு பயந்துவிடமாட்டார்கள். ஆனல் அவர்கள் செய்த பிழைகளைத் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். ஆகவே அனுஷ்டானத்தில் நிறைவேற்ற முடியாத ஒரு தீர்மானத்தை நாம் கைக்கொள்வதைப் பார்க்கிலும், தேசிய வாதிகள் எல்லோரும் சட்ட சபைகளில் நிறைந்து தேச நன்மையை விருத்தி செய்யலாம். ஒற்றுமையாமை என்னும் விஷயத்தை 60 லக்ஷம் ஓட் சுதந்தரக்காரர்களும் அங்கீகரித்து விடுவார்கள் என்று நாம் நம்பமுடியாது, அவ்வித ஒற்றுமை நம் இந்தியர்களுக்குள்ளிருந்தால் நாம் இப்பொழுது இவ்வளவு கேவலமான நிலையிலிருக்கவேண்டிய அவசியமேயில்லை. இவைகளை நீங்கள் பரியாலோசித்து மனச்சாக்ஷியின்படி தேசநன்மைக் குற்றவாறு நடந்துகொள்வீர்களெனக் கோருகிறேன்.

# மிஸ்டர் வி. எஸ். ஸ்ரீனிவாஸ சாஸ்திரியாரின் விஜயம்.

# ஒற்றுழையாமைப் பிரசங்கம்.

## மனச்சாக்ஷியை மதித்து நடந்துகொள்ளுங்கள்!

## அற்ப விஷயத்தைக் கருதி அனந்த நன்மையை இழக்காதீர்கள்!

இவ்வூர் ரிடிங்ரூம் அண்டு யூனியன் கிளப்பின் ஆதரவில் மாலை 5—மணிக்கு ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசுவர வித்தியாசாலைக் கட்டிடத்தில், பூனாவிலுள்ள இந்திய ஊழியச் சங்கத்தின் அக்கிராஸனரும், ராஜப்பிரதிநிதியின் சட்டசபை அங்கத்தினருமாகிய கனம் ஸ்ரீமான் வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரியாரவர்கள் "ஒத்துழையாமை" என்னும் விஷயத்தைப்பற்றி தமிழில் ஒரு அருமையான உபந்யாசம் செய்தார்கள். அதன் சாரம் வருமாறு:—நாம் தற்காலம் ராஜீயத்துறையிலே முக்கியமாகக் கவனிக்க வேண்டிய பல விஷயங்களிலும் மிகமுக்கியமானதெனக் கருதவேண்டியது யாதெனில் கவர்ன்மெண்டோடு நாம் ஒத்துழைப்பதா? அல்லது ஒத்துழையாமையைக் கைக்கொள்வதா? என்பதேயாம். தேசமெங்கும் இந்த ஆலோசனையிலேயே இப்பொழுது கவனம் செலுத்தப்பட்டு வருகின்றது.

தேசத்திலுள்ள சாமானிய ஜனங்களில் பெரும்பான்மையோர், இவ்வொற்றுழையாமை என்னும் விஷயமானது காங்கிரஸ் தீர்மானத்தைப்பெற்று விட்டதென்றும், அதனால் நாம் இதனை அனுஷ்டித்தல் வேண்டுமென்றும் நிர்ப்பந்தத்தோடு கருதுகின்றனர். ஆனால் உண்மையாகக் கவனிக்குமிடத்திலோ அந்த நிர்ப்பந்தத்திற்கு இடமில்லை. காங்கிரசிற்குப் பற்பல மாகாணங்களிலிருந்தும் வந்திருந்த பிரதிநிதிகளின் மொத்தத் தொகை 5814. ஆனால் இவர்களில் ஓட்டுக் கொடுத்தவர்கள் 2709 பேர் மத்தியஸ்தராக இருந்தவர்கள் 63 பேர் அதாவது மகாத்மா காந்திக்கு மாத்திரம் ஓட்டுக்கொடுத்தவர்கள் 1826. ஸ்ரீபாலரின் திருத்தத்திற்குச் சாதகமாக ஓட்டுக்கொடுத்தவர்கள் 883 பேர் மற்றப் பிரதிநிதிகள் பம்பாய் ஸோஷல் ரிபார்மர் என்னும் பத்திரிகை சொல்வதுபோல் நாம் போனாலும் போகாவிட்டாலும் ஒத்துழையாமைத் தீர்மானம் நிறைவேறிவிடுமெனக் கருதியே போகாமலிருந்துவிட்டனர். (இங்கு மிஸ்டர் சாஸ்திரியார் காங்கிரசுக்கு பாகப் பிரதிநிதிகள் வராத காரணங்களைப்பற்றி பத்து இருபது வகைக்காரணங்களைக் கற்பனையாக வருணித்துச் சமாதானங் கூறினார்) காங்கிரஸ் தீர்மானிக்கின்ற விஷயம் யாதெனில், அந்த அந்த மாகாணங்களும் தமது ராஜீயத் தேவைகளை யுத்தேசித்து வருஷம் பூராவும் செய்துவருகின்ற ஆலோசனைத் தீர்மானங்களை ஒரு முடிவுக்குக்கொண்டு வருவதாம். அந்த முறைப்படி இவ்விசேஷ காங்கிரஸ் தீர்மானித்திருக்கின்றதா என்பதை கவனிப்போம்.

### 1 சட்டசபை பகிஷ்காரம்

சென்ற 35 வருஷகாலங்களாக (ஏன்? ஒத்துழையாமைத் தீர்மானம் நிறைவேறுவதற்குச் சில நாட்களுக்கு முன்புகூட) தேசியவாதிகளே சட்டசபைகளில் ஸ்தானம்பெற்று நிறைந்திருக்கவேண்டும், என்று தீர்மானஞ் செய்திருக்க, இப்பொழுது சட்டசபையை பகிஷ்காரஞ் செய்வது என்றால் அதன் கருத்தென்ன? மகாத்மா காந்தி பிடிவாதமாக நிறைவேற்றிவிட்ட இந்தத் தீர்மானமானது அடுத்த நாக்பூர் காங்கிரஸில் மாற்றப்பட்டு எல்லோரும் சட்டசபைக்குப் போகலாம் என்று தீர்மானமாகிவிடும் (இவ்விதஞ் சொல்லி வரும்பொழுது சபையிலிருந்த ஒருவர் அவ்விதம் உறுதிகூறுவதை ஆக்ஷேபித்தார் அதற்கு விடையாக மிஸ்டர் சாஸ்திரியார்) அநேகமாக ஆகலாமென்று நினைக்கின்றேன். இந்த முக்கியமான சமயத்தில் சட்டசபைகளை பகிஷ்காரஞ்செய்வது என்றால் அது சரியா? அது சரியன்று. அது பெரும்பிழையாகும். மேதாவிகளாகிய தேசியவாதிகள் சட்டசபைகளை பகிஷ்காரஞ் செய்து விட்டால் அந்த ஸ்தானங்களில் மூடர்கள் வந்து நிறைந்துவிடுவார்கள். அது பேராபத்தாக முடியும். அவ்விதம் நாம் பகிஷ்காரஞ் செய்வதனால் மாத்திரம் கவர்ன்மெண்டாகிய தேசரைச் செல்லவொட்டாமல் தடைசெய்து விடவும் முடியாது.

இதைக் குறித்து வேறுசிலர் சொல்வது யாதென்றால், 'அடுத்த நாகப்பூர் காங்கிரஸ் தீர்மானப்படி செய்து கொள்வோம்' என்பதே. அடுத்த நாகப்பூர் காங்கிரசுக்குள் எலெக்ஷன் முடிந்துவிடுமாதலால், நம்முடைய தீர்மானம் காத்திருப்பது கொண்டு யாதொரு பயனுமில்லை. இப்பொழுது ஒத்துழையாமையைக் கைக்கொள்ளும்படி வற்புறுத்துகின்ற மகாத்மா காந்தி இதனை அறிந்துதானிருக்கவேண்டும். ஏனெனில் இவ்வொற்றுழையாமையை ஆரம்பிக்கு முன் அவர் சொன்ன சமாதானத்தில் இது விளங்குகின்றது. கலிபத் சம்பந்தமாக மகம்மதிய நண்பர்கள், தமது மதக்கொள்கையின்படி இரண்டு விதமான முறைகளையே பின்பற்ற வேண்டியவர்களாயிருக்கின்றனர். அவை:—"1. கத்தியெடுத்து யுத்தஞ் செய்தேனும் கலிபாவைக் காப்பாற்றுவது, 2. அல்லது தமது மனைவிமக்களுடன் தேச (நிர்வாகஞ்செய்து) இந்ததேசத்தைவிட்டு வெளியேறிவிடுவது" என்பதாம். இந்த நெருக்கடியான சமயத்தில் மிஸ்டர் ஷவுகத் அலி கத்தியெடுத்து யுத்தஞ்செய்யவே விரும்பினர். ஆனால் நான் (மகாத்மா காந்தியடிகள்) ஷவுகத் அலியை அவ்வாறு செய்யவேண்டாமென்றும், இனியும் ஆறுமாத காலம்வரை ஒத்துழையாமை என்னும் ஆயுதத்தால் வெற்றிபெறப்பார்ப்போமென்றும்" மகாத்மா காந்தியே சொல்லியிருக்கின்றார். 6 மாத காலம் வரை இதை அனுஷ்டித்துப் பார்ப்போமென்று கூறுவதால், அக்காலத்திற்குள் மகம்மதியர்களின் மனக்கொதிப்புக்கும் பஞ்சாப் படுகொலைக்கும். நியாயம் வழங்கப்படாவிட்டால் மிஸ்டர் ஷவுகத் அலியின் போக்குப்படி நடக்குமென்பது கூறியது போலாகின்றது. மகாத்மா, ராஜீய சம்மந்தமான ஒரு விஷயத்தை மத சம்பந்தமாகச்செய்து அதற்கு ஒத்துழையாமையை ஒருகருவியாகக்கூறி அதனைக்கொண்டு தேசமெங்குமுள்ள வீர்ந்த முகம்மதிய ஜனங்களைக்கிளர்ச்சி செய்யும்படி செய்துவிட்டு 6 மாதத்தவணையும் போட்டு, பிறகு அது நிறைவேறாவிட்டால் இரத்தஞ்சிந்த இடமுண்டென்றும், இவைகளை யுணர்ந்து ஜனங்கள் ஒத்துழையாமையை அனுஷ்டிக்காவிட்டாலும் 6 மாதம் வரையிலாவது 'தாம் ஷவுகத் அலியின் உபாயம் நிறைவேறாமல் தேசத்தில் அமைதியை நிலைக்கச் செய்ததே' சிறிது நன்மையன்றோ எனவும் மகாத்மா கூறுகின்றார் ஒத்துழையாமை நிறைவேறாது, என்பதை அவர் அறிந்திருக்கிறாரெனக் கருதுவதற்கு இங்கு இடங்கொடுக்கின்றது. ஆதலால் காங்கிரஸ் தீர்மானித்துவிட்டதே எனக்கருதி மாத்திரம் ஒருவரும் ஒத்துழையாமையை அனுஷ்டித்துத் தீரவேண்டுமென நிர்ப்பந்தமாகக் கருதவேண்டாம்,

அதற்கும் மகாத்மா காந்தியே இடங்கொடுத்திருக்கின்றார். தன்னுடைய ஒத்துழையாமைத் தீர்மானத்தைக் காங்கிரஸ் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், தான் மாத்திரம் தன்னுடைய மனச்சாக்ஷியைத்தான் மதித்து நடக்க முடியும் என்று சொல்லியிருக்கின்றார். கிலாபத்துக் கூட்டத்திலும் அவர் இவ்வாறே சொன்னதுண்டு. ஒரு உபாயமானது தனக்கு ஆபத்தைக் கொடுக்குமென்று புத்தியில் பட்டிருந்தும் அதை ஒருவர் அலக்ஷியஞ் செய்து அவ்வாபத்கரமான உபாயத்தைக் கைக் கொண்டால் கடைசியில் அது ஆபத்தையே விளைவிக்குமென்பது திண்ணம். புத்திமான்கள் அவ்வித உபாயத்தைக் கைக் கொள்வது பெரும் பிழையாகும். இவ் விஷயத்தில் தன் மனச்சாக்ஷியை மதித்து நடந்து கொள்வதுதான் தேசாபிமானமாகுமே யன்றி காங்கிரஸ் தீர்மானித்துவிட்டதே எனக் கருதி தீர்க்க ஆலோசனை செய்யாமல் நாகரீகத்திற்குள் பட்டு ஒரு வழியில் இறங்கிவிடுவது தேசத் துரோகமாகும். அது உண்மையான காங்கிரஸ் அபிப்பிராயமுமல்ல நம் தேசத்திலுள்ள பலர்க்கும் இது போன்ற ராஜீய நுட்ப விவகாரங்கள் தெரிந்துகொள்ள இடமில்லை. சிலர் தேசத்தின் க்ஷேமத்தையும் தேசத்தின் க்ஷாமத்தையும் ஒன்றாகவே கருதுகின்றனர் சிலர் தேசத்தில் என்ன விஷயங்கள் நடக்கு வந்தபோதிலும் தர்ம ராஜ வாகனத்தின் மீது வரும் பகவான் வருவித்தது போல் விளங்குகின்றனர். பொது நன்மையில் நோக்கமும் விருப்பமும், வெளிப்படவில்லை, வேறு சிலர் தீவிர ஆலோசனைக் குழப்பத்தால் வேந்தன் ஒரு பசுவைக் காப்பாற்றுதல் என்னும் அற்பப் பிரயோசனத்தின் பொருட்டுத் தனது அரிய யௌவனத்தையும் பெரிய சக்கிரவர்த்தியின் பதவியையும் எல்லாவற்றிற்கும் மேலான உயிரையுங் கூட விட்டு விடத் துணிந்தது போல் நாமும், ராஜீயத் துறையில் நிகழ்கின்ற பெருங் குழப்பத்தால் "கலிபத்துப் பஞ்சாப்" சம்பவம் போன்ற சொற்ப விஷயத்திற்காக, சட்ட சபைகளி லமர்ந்து தேச மகா ஜனங்களின் க்ஷேமத்தை யுத்தேசித்துச் செய்யக் கூடிய பற்பல நன்மைகளை இழந்துவிடக்கூடாது காங்கிரஸ்தீர்மானத்தைத் தாம் ஒருபெரிதாக நினைத்து தேசத்தை விட்டு விடக் கூடாது. பம்பாய் வங்காளம், பஞ்சாப் ஐக்கியமாகாணம் முதலியவற்றில் பலர் சட்ட சபைகளைபகிஷ்காரஞ்செய்து விட்டனர். நம் சென்னை மாகாணத்திலும் ஸ்ரீமான் வி. விஜயராகவாச்சாரியாரைப்போன்ற மேதாவிகள் சட்டசபையை பகிஷ்காரஞ் செய்துவிட்டனர். மேதாவிகள் சட்டசபைகளை பகிஷ்காரஞ்செய்வது நன்றன்று. சில பெண்களுக்குக் கோபம் வந்துவிட்டால் தன் வீட்டிலுள்ள சிலபாத்திரம் முதலியவைகளை யுடைப்பதில் தங்கள் கோபத்தை யுபயோகித்துக் கொள்வார்கள். இன்னும் குழந்தைகளிருந்தாலும் அதற்கும் சிறிது பிரசாரம்கொடுப்பர். அதனால் யாருக்கு நஷ்டம்? இது போல் நமக்கு நாமே அனாவசியமான நஷ்டத்தை விளைவித்துக் கொள்ளக்கூடாது, நமக்கு நாமே பீடையை விலைக்கு வாங்கக் கூடாது நாம் ஆயிரக் கணக்கான கேடுகளுக் குட்பட்டுச் சம்பாதித்ததை மிந்திரிவிஷயத்திற்காக விட்டுவிடக்கூடாது.

புதியசீர்திருத்தத்தின்படி ராஜப்பிரதிநிதியின் சட்டசபைக்கு 150 பேர் பிரதிநிதிகளாகப் போகவேண்டும். அதற்கு 50 புத்திமான்களாவது போகாது நின்றுவிட்டால் புத்தியில் குறைந்தவர்கள் அந்த ஸ்தானத்தை நிறப்பிவிடுவார்கள். அவ்வாறே சென்னைச் சட்ட சபைக்குப்போகவேண்டிய 120 பேர்களில் 20 25 பேர் நின்றுவிட்டாலும் என்னைப்போல் சிலர் துணிந்தே செல்வார்கள். தேசிய வாதிகள் சட்டசபைகளுக்குச் செல்லாவிட்டால் அது கவர்ன்மெண்டுக்கு மிகச் சந்தோஷமாகும். இவைகளையெல்லாம் கவனிக்கும்பொழுது தேசியவாதிகள் முன் செய்துகொண்ட தீர்மானங்களை இழப்பது சரியன்று.

### 2. பள்ளிக்கூடங்கள்

இனி நம் சிறுவர்கள் பள்ளிக்கூடங்களுக்குச் செல்லக்கூடாது என்று கூறுகின்ற விஷயத்தைக் கவனிப்போம். நம் குழந்தைகளைத் தற்கால ஆங்கிலப் பள்ளிக்கூடங்களுக்குச் செல்லக்கூடாதென்றால், அந்தக் குழந்தைகள் படித்து முன்னுக்கு வரவேண்டுமெனக் கருதி ஆடையாபரண சிலப்பொருள்களை விற்றும் பள்ளிக்கு வைத்த பெரியோர்களின் கதியென்ன? அல்லது அவ்விதம் ஆங்கிலப் பள்ளிக்கூடங்களை விட்டுவிடுகின்ற குழந்தைகளுக்கு உடனே தேசியக் கல்வியும் உத்தியோகமும் சம்பாதித்துக்கொடுப்பதற்கு எவ்வளவு தேசியக் கலாசாலைகள் ஏற்பட்டுள்ளன? தற்காலம் கவர்ன்மெண்டின் ஏற்பாட்டின்படி அமைக்கப்பட்ட எல்லாப் பொருள்களும் அந்த தேசியக் கலாசாலைகளில் நிறைந்துள்ளனவா? தேசியக் கல்வி புகட்டுவதற்கு உபாத்தியாயர்களிருக்கிறார்களா? இவைகளையெல்லாம் வாயினால் சொல்லிவிட்டால் போதாது. ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்துவதென்றால் அது சாமான்யமல்ல, ஒவ்வொரு இடங்களில் இடிந்து மடிந்து கிடக்கும் பள்ளிக்கூடங்கள் பலவும், வாடகை கொடுக்கக்கூடச் சக்தியில்லாத ஸ்கூல்கள் பலவும் இருக்கின்றன. அடிக்கடி மேற்படிக் கட்டடச் சௌகரியமின்மையைக் குறித்து மேலதிகாரிகள் நிர்ப்பந்தஞ் செய்வார்கள். கிராண்டுகளை கொடுக்க மறப்பார்கள். அதுபோன்ற கஷ்டங்கள் இந்த ஸ்கூல் ஏற்படுத்தினவர்களைப் போன்றவர்களுக்குத் தெரியாது ஆனால் தேசியக் கல்வியை விருத்தி செய்யவேண்டுமென்று வற்புறுத்துகின்ற மகாத்மா காந்திக்கு இவை தெரியாதா எனக் கேட்கலாம். இது மகாத்மாவுக்கும் தெரிந்ததுதான். இதற்கு மகாத்மா என்ன சமாதானம் சொல்லுகிறாரென்றால், தற்கால ஆங்கிலக் கல்வி குமாஸ்தா உத்தியோகத்திற்குத் தயார் செய்வதாக மாத்திரம் இருப்பதால் இது தேவையில்லை, தேசியக் கலைகளும், தேசியத் தொழில்களும் செழிக்கும்படிசெய்யத் தக்க கல்வியே நமக்கு வேண்டும். அதைத்தான் நான் வற்புறுத்துவேன் என்று கூறுகின்றார். தற்காலமுள்ள பெரிய பெரியதொழிற்சாலைகள் மில்லுகள் யந்திரசாலைகள் இவைகளெல்லாம் வேண்டாமெனவும், எல்லோரும் அவரவர் தேவைக்குத்தக்க வஸ்திரங்களை அவர்களே நெசவுசெய்து கொள்ளலாமென்றும் கூறுகின்றார். தேசத்தில் ஒருவன் மாத்திரம் பணக்காரனாக இருப்பது, மற்றவர்கள் ஏழைகளாயிருப்பது என்ற கொள்கையை அவர் விரும்புவதேயில்லை. இந்த கொள்கையை அவர் உறுதியாகவும் வெகு கடுமையாகவும் சொந்தத்திலேயே அனுஷ்டித்து வருகின்றார். உதாரணமாக மிஸஸ் காந்தி, தமது பெட்டியில் இரண்டு புடவைக்குமேல் ஒரு புடவையைக் கூடவைத்திருந்தார். அதைப்பார்த்தவுடன் மகாத்மா வருந்தி, அது திருட்டுசொத்தெனக்கூறி அதிகமான ஒரு புடவையை எடுத்து ஒரு ஏழைக்குக் கொடுத்துவிட்டார். (அதாவது ஒருவன் தனது தேவைக்குமேல் வைத்திருக்கின்றபொருள் பொது ஜனங்களைச்சார்ந்ததாகும், ஆதலால் அந்தசொத்தைப் பொதுஜனங்கள் அனுபவிக்கமுடியாமல் தான் கைப்பற்றி வைப்பது திருட்டுச் சொத்தாகுமென்பது மகாத்மாவின் கருத்து) மகாத்மா காந்தி உண்மையிலேயே ஜீவகாருண்யம் நிறைந்த ஒரு உத்தமஞானி. அவர் ஜனங்களின் நன்மையிலே பெரிதும் விருப்பங்கொண்டவர்தான். ஆயினும் நன்மையிலே விருப்பங்கொண்ட ஒருவர் அனுஷ்டிக்கின்ற முறைகளெல்லாம் நல்லவைதாம் என்று சொல்லிவிட முடியாது. நாயகனையிழந்த ஒரு ஸ்திரீயானவள், 'உண்மையிலே தன் குழந்தையினிடத்தில் அன்புள்ளவள்தான்' அவள் அன்பில்லாதவள் என்று சொல்ல முடியாது. ஆயினும் அவள் அந்தப்பையனை வளர்க்கின்ற முறை சரியானதுதான் என்று எவ்விதஞ் சொல்லமுடியும்?

### 3 கோர்ட்டுகளை விலக்குதல்

கல்கத்தா வக்கீல்களில் அநேகர், கோர்ட்டுகளை விலக்கியுள்ளனர். கோர்ட்டுகளை விலக்குவதனால் நமக்கு அநேகந் தீமையும் உண்டு. நம்முடைய விவகாரங்களின் கதியென்ன? கல்கத்தாவக்கீல்களில் சிலர் "நாங்கள் தேசியப் பஞ்சாயத்துக் கோர்ட்டுகளுக்கு வருகிறோம், எங்களுக்கு பீஸ் எங்கே என்று கேட்கின்றனர் வக்கீல்கள் ஏககாலத்தில் கோர்ட்டுகளை விட்டுவிட்டால் காலக்ஷேபத்திற்கு என்னசெய்வார்கள். [சபையிலிருந்த ஒருவர், தேசியக்கோர்ட்டு களிருக்கின்றனவே! என்று சொன்னார்) அதற்கு மிஸ்டர் சாஸ்திரியார் மந்தகாசஞ் செய்தனரே யன்றி சரியானவிடைகூற வேண்டுமென்று கருதினதாகக்காணவில்லை. இனிஅநேகர்வெளிநாட்டுப்பொருள்களை விலக்கவேண்டும் என்று கூறுகின்றார்கள், அவைகளையும் விலக்குவதற்குச் சாதகமாக "அதாவது மெல்லமெல்லக் கோர்ட்டுகளை விடுதல்" என்ற ஒரு பதத்தைச் சேர்த்திருக்கிறார்கள். இதைக்குறித்து மகாத்மாகாந்தியும் ஆக்ஷேபித்தார். நிறைவேறாத ஒருவிஷயத்தைத் தீர்மானித்தால் ஜனங்கள் என்னசெய்வது "பள்ளிக்கூடங்களுக்கு மாணுக்கர் செல்வதில்லை" என்ற முறையானது, பிரான்சுதென் ஆப்பிரிக்கா முதலிய இடங்களில் அனுஷ்டிக்கப்பட்டதாகச், சிலர் சொல்லுகிறார்கள், அது உண்மைதான் அவ்விதம்பள்ளிக்கூடத்தைவிட்ட மாணுக்கர்கள், பிரான்சில் ராணுவப் பயிற்சி பெற்றும், ராணுவத்தில் சேர்ந்து போர்புரிந்தும், யுத்தத்திற்கு வேண்டியவைகைத் தொழில்களைச்செய்தும் தேசஊழியஞ்செய்து தேசத்தைச்சத்துருவினிடமிருந்தும்காப்பாற்றினார்கள். அவைஅவ்வாலிபர்கள் கெட்டலிருப்பதற்குப் பெருத வியாயிருந்தன அதுபோல் ஆங்கிலப் பள்ளிக்கூடங்களை விட்டு விடுகின்ற வாலிபர்களுக்கு நாம் வேறு என்னவேலை கொடுக்கிறோம். லக்ஷக்கணக்கான வாலிபர்கள் பள்ளிக்கூடங்களை உதறி விட்டால் அவர்களின் புத்திக்கு வேலையெங்கே, இப்பொழுது நம் தேசத்தில் மாணுக்கர்கள் வேலை செய்யும்படி யுத்தமும் கிடையாது இப்பொழுது நம்மிந்தியா விற்கு அவ்விதம் என்னஆபத்துவந்து விட்டது? இனி மகாத்மா சொல்லுகின்ற உபாயங்களைக் கவனிப்போம் கடைகளை அடைத்துவிட்டால் நம்மவர்க்கு என்ன நன்மை ஏற்படப்போகின்றது. சாமான்கள் வேண்டியவர்கள் மறுநாள் வாங்கிக்கொள்வர் வியாபாரிக்கு ஒருநாள் ஒய்வுகிடைப்பது லாபகதான். அவ்விதமே சாந்தியின் வேஷமாக ஒருவனாகிய சென்னை வியாபாரியொருவன் கூறினான். இனி பட்டினிகிடப்பதாகிய ஏகாதசி விருதம் முதலிய பலவிருதங்கள் சதா அனுஷ்டித்து வருகின்ற இந்துக்களுக்கு சகஜந்தான் இவைகளால் பிரமாதமான பயனொன்றும் விளைந்து விடவழியில்லை. கவர்ன்மெண்டும் ஸ்தம்பித்துவிடாது, ஆனால் மகாத்மா இவ்வளவு கடுமையான ஒத்துழையாமையை வற்புறுத்துவானேன் என்றால் தேசிய ஜனங்கள் இதுவரையில் போட்டுவந்த கூச்சல்களையும் கண்டனத்தீர்மானங்களையும் கவர்ன்மெண்டு கவனியாததால் இனிப் புதியமுறையில் சிறிது கடுமையாக நம்முடைய கோபத்தைக்காட்டி விடவேண்டும் என்பதே இதுவும் கவர்ன்மெண்டுக்குத் தெரியும் கவர்ன்மெண்டார் தமது பகைவர்களிடம் ஏராளமான உபத்திரவப் பட்டு சமாளித்து வருவதால் இந்தக் கோபத்தை அவர்கள் லக்ஷியஞ் செய்யமாட்டார்கள். இந்தத்தத்துவத்தையும் மகாத்மா அறிந்தே, எனது கொள்கையைச் சில ஜனங்களாவது பின் பற்றினால் போதும், அல்லது 10, 20 பேர் அனுஷ்டித்தால் போதும், அல்லது நான் மாத்திரமாவது இதை யனுஷ்டித்துத் தான் தீருவேன் என்று அதிகாரிகளிடத்திலுள்ள கோபத்தினால் ஒரு கடுமையான தீர்மானத்தைக் கைக் கொண்டிருக்கிறார். இந்தத் தீர்மானமானது மகமதியருக்கு கொடுக்கப் பட்ட வாக்குறுதியின்படி இன்னும் 4 மாதத்திற்குள் நிறைவேறித் தீரவேண்டும் உண்மையிலே கவனிப்பதானால் தற்கால நிலை காந்தி கருதுவது போல அவ்வளவு கடுமையானதாக இல்லை. குடும்பத்தில் நடக்கின்ற சொற்ப விஷயங்களுக்காகச் சிலர் கோபித்துக் கொண்டு வீட்டின் கதவு முதலியவைகளை உடைப்பது போல் நாம் செய்ய வேண்டியதில்லை, பொறுமையில்லாதவர்கள் அவ்விதஞ் செய்வார்கள், பொறுமை யுள்ளவர்கள் அவ்விதம் செய்ய மாட்டார்கள், பொறுமையுடையோர் நிதானிப்பார்கள், கவர்மெண்டாரும் தாங்கள் பிழை செய்திருப்பதாகஉணர்ந்து விட்டார்கள், இனி க்ரமமாக அது நிவர்த்திக்கப்படும். இதற்குள் நாம் தற்கொலை செய்துகொள்ள வேண்டுமோ கல்லுளிமங்கனைப் போல் நமக்கு நாமே தீமைசெய்துகொள்ள வேண்டுமா? (அப்பொழுது சபையில் ஒருவர் ஆக்ஷேபித்து, இங்கிலீஷ்காரர்கள்தான் கல்லுளிமங்கன்" என்றார், அதற்கு மிஸ்டர் சாஸ்திரியார்,) "இங்கிலீஷ்காரன் கல்லுளிமங்கன்தான்- ஆனால் அவர்களுடைய கல்லுளிமங்கத்தன்மை பிறரைப் பாதிக்குமேயன்றி அவர்களை ஒன்றும் செய்யாது அவர்களுக்கு அதனால் சௌக்கியம் ஏற்படுகிறது. ஆனால் நம்முடைய கல்லுளிமங்கத்தனம் நமக்குத்தான் கேடுவிளைவிக்கின்றது. "மகாத்மாவின் கோபமான இந்த ஒத்துழையாமைத் தீர்மானத்தை ஸ்ரீ மாளவியா அங்கீகரிக்கவில்லை இன்னும் பல புத்

(இதன் தொடர்ச்சி 9ம் பக்கம் காண்க)

(3-ம்பக்கத்தொடர்ச்சி)

ண்டப்பட்டவர்களாய், முதலில், தாங்கள் செலவிடுஞ்சொத்துக்களைத் தங்களுடையதாக எண்ணுமல், பணத்தின் தன்மையைச் சேரப்செல்லவேண்டியகோர்ட்டுகளிலெல்லாம்சென்று நடையோகப்பணமாகச் செலவழிப்பெற்று, அரசாங்கம் மாத்திரம், அல்லாது, பச்சாத்தாபம் மாத்திரம் மிஞ்சியவர்களாக ஆகிவிடுகின்றனர். இனி, கொடுக்கல்வாங்கல் சம்பந்தமாக வியாச்சியம் தொடரும் போது, தாங்கள், வாதிப் பிரதிவாதிகளாக நின்று செலவிடும் செலவுகளுக்கும், அனாவசியமான காலத்தை தாங்கள் செலவுசெய்ததற்குமாக, ஏற்படும் பிரதிப்பிரயோஜனமானது ஒன்றுமே இல்லையென்பதையும் இவர்கள் நன்கறிவர். இவ்விதம் வாதிப்பிரதிவாதிகளில், ஏதேனும் ஒரு கக்ஷியர். ஒருவரை மோசஞ்செய்வதற்காகச் செய்யும் பலவித சூழ்ச்சிகளால், ஜனங்களின் மனோபாவம் கெட்டுவிடுகின்றது. பொதுவே, ஒருவருக்கொருவர் செய்யும் சண்டைச்சரவுகளில், பலவான் பணத்தைச் செருக்கால், சாக்ஷிகளையும், ஏஜண்டுகளையும், வாக்கு சாதூரியமுள்ள வக்கீல்களையும், அமர்த்தித் தான் கொண்ட எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளுகிறான். குயுக்திகளைச் சொல்லிக் கொடுப்பதற்காகவே ஏஜெண்டுகளும் நியமிக்கப்படுகிறார்கள். இவர்கள், நியாஸ்தர்களையும் தேவின் போக்குக்குத்தக்கபடி தாராலோசனைகளைச்சொல்லிக் கெட்டவழிகளில் நடக்கும்படி தூண்டுகின்றனர். கேசுதொடுப்போர் கேசு தோற்றுவிடுமென்ற பயங்காரணமாக பொய்மையாய் நடந்த சம்பவத்திற்கு விரோதமாகவும்வேலைசெய்ய ஆரம்பிக்கின்றனர். அதனால் நியாய உணர்ச்சியும், சத்தியமுணர்வும், ஜனங்களின் மனத்தை விட்டுச் சிறிது சிறிதாக அகலுகின்றது. ஜனசமூகத்தில், ரோஷ், களவு முதலான வேண்டா இனங்களில்மனத்தைச்செலுத்தும் இயல்புடைய ஜாதியார்களும் பிரத்தியேகப்பட்ட சில மனிதர்களும் இருக்கின்றனர். ஆனால், அவர்களின் தீயமனச்செயல்களை நிவர்த்திசெய்யும் உரிமை பூண்ட ராஜாங்கத்தார், இதுவரை அவர்களுக்குச்சரியான போதனைகொடுக்கும் விஷயத்தில் தலையிடவில்லையென்றே சொல்லலாம். இதற்குக்காரணமாக, மதுரை ஜில்லா கள்ளர் நாடுகளிலுள்ள கள்ளர்கள், இதுகாறு 'குற்றமேசெய்கின்ற ஓர் ஜாதியாரெனக் கருதப்பட்டு' வந்ததோடு அவர்களுக்கென்று தனிச்சட்டமொன்றும் ஏற்படுத்தப்பட்டிருந்தது. மேலும், அந்த ஜாதியில் பிறந்த நல்ல சுபாவமுடையவர்களும், கெட்ட சுபாவமுடையவர்களும் வித்தியாசம் பாராட்டப்படாமல் அவர்களுடைய கைரேகையடையாளம் வாங்கப்பட்டுவந்ததுடன் தினந்தோறும்இரவில் அவர்கள் ஆஜர் கொடுக்கும்படிக்கும் அனுஷ்டானச் சட்டமொன்று செய்யப்பட்டும் வந்தனர். ஆனல்இப்பொழுதோ, அவர்களின் போராட்டம் காரணமாக அவர்களுக்கு சிறிதளவு மோக்ஷம்பிறந்துவிட்டது. அவர்களுக்குள் பஞ்சாயத்து சபைகளேற்பட்டு, அவர்கள் தங்களைத் தாங்களே கொலைவுமுதலியசெயல்களினின்றும்பாதுகாத்துக்கொள்ளப் போதிய அதிகாரமும் பெற்றுவிட்டார்கள். உற்றுநோக்குமிடத்து இன்னும் சிறிதுநாட்களில் அவர்கள் மேலான ஸ்திதிக்கு வந்துவிடுவார்களென்பதுகூட நம்பஇடமுண்டாய்விட்டது, அவர்களால் இதுவரையில் ஜனங்களுக்கு ஏற்பட்டிருந்த கஷ்டம் நீங்கப்போகிறது, அவர்களும் தாங்கள் உலகயாத்திரையில், இனிச் செல்லவேண்டிய வழிகளையும் கண்டுகொள்ளலாயினர். ஆகவே, வியாச்சியத்திற்கு ஆதாரமான மேற்சொல்லப்பட்ட அம்சங்களாலேயே, பொது ஜனங்களின் புத்திப் போக்கானது, ஒருவரையொருவர் வஞ்சகம் செய்வதிலும், பொய்க்கேசுகளைசிருஷ்டிஞ்செய்வதிலும், பிறர் சொத்தை அபகரிப்பதிலும், அவைகளுக்குரிய சூழ்ச்சி புரிவதிலும் சதா காலம்யாத்திரைசெய்துகொண்டிருக்கிறதெனக் கூறுவதில்சந்தேகமில்லையெனக் கூறவேண்டியிருக்கிறது. நல்வழியில் பணம் சம்பாதிக்கச் சக்தியற்றவர்களாகிய ஏஜெண்டுகளும், வியாச்சியங்களையே மேன்மேலும் விருத்திசெய்து தங்களிடம் வந்த



## அன்னிய வர்த்தமானம்

### ஆப்கன் சமாதானம் அங்கீகரிக்கப்பட்டதாம்

பிரிட்டிஷாரோடு செய்துகொண்ட சிநேக உடன்படிக்கையை ஆப்கன் கவர்ன்மெண்டார் அங்கீகரித்துவிட்டனராம். கூடிய சீக்கிரம் ஸிம்லாவில் இது சம்பந்தமாக ஒரு மகாநாடு கூடுமென இங்கிலீஷ் மென் கூறுகின்றது.

### கோதுமைமலிவாம்

ஆஸ்திரேலியாவில் 25 லக்ஷம் டன் கோதுமைகள் அதிகமாக இருக்கின்றனவாம். இவைகளால் இந்தியாவுக்கு ஏதேனும் பயனுண்டாகக்கூடுமா என்பது ஒரு கேள்வி!

### ஹாலந்தில் இந்திய கவிச்சக்கரவர்த்தி.

ஸர் ரவீந்திரநாத் டாகூர் ஹாலந்து தேசத்தில் பொருளாதார விஷயங்களைப்பற்றிப் பல உபந்யாசங்கள் செய்து வருகின்றார். ஹேக் என்னுமிடத்தில் 'கிழக்கும் மேற்கும் சந்திப்பதாலேற்படும் பயன்' என்பது பற்றியும், ராட்டர் டாம் என்னுமிடத்தில் 'எனது கல்வியைப்பற்றியகொள்கைகள்' என்பதைக் குறித்தும் பிரசங்கித்தனராம்.

### 60 ஆயிரம் இந்தியர்கள்.

பிஜித்தீவில் 60 ஆயிரம் இந்தியர்கள் வசித்துவருகின்றார்கள். அவர்களின் உழைப்பால் அங்குள்ள வெள்ளையர்கள் எவ்வளவு செல்வத்தைக் கொள்ளைகொண்டுள்ளார்களென்பதையும் நாம் சொல்லத் தேவையில்லை

டைந்த கக்ஷிக்காரர்களை விடுவதற்கு மனமில்லாமல் பணசம்பாதித்தியமொன்றையே பிரதானமாகக்கொண்டு, பொதுஜனநன்மையைச்சிறிதும் கருதாத சில வக்கீல்களும், ஜனங்களின் ஒற்றுமைக்குப் பாதகமாயிருக்கின்றனரென்பதை விசேஷமாகச்சொல்ல வேண்டியதில்லை. மேற்கூறியசம்பவங்களால், இந்த நாட்டிலும், எந்நாட்டிலும் ஜனங்கள் தவறானவழியில் நடத்தப் படுகின்றார்களென்று சொல்ல வேண்டும். ஜனங்களை ஒற்றுமையில்லாமல் செய்து பிரித்தாளுவதற்கு முறையே சட்டப்பிரிவுகளும், கோர்ட்டுகளுமே சிறந்தஆயுதங்களாக விளங்குகின்றனவெனக் கூறலாம். ஒவ்வொரு ஜன சமுதாயமும் நல்வழிப்பட்டு முன்னேற்றமடையாமல் செய்வதற்கு அச்சமுதாயத்திலுள்ள ஓர் பகுதியார் காரண புருஷர்களாய் நிற்கின்றார்களென்பதை நோக்கப் பெரிதும் விசனகரமாயிருக்கின்றது. இனியாவது ஜனங்கள் இவ்விதம் தமோ குணச்செயலாகிய அகங்காரம் மேலிடப்பெறுது, தங்களுக்குள்ளேநிகழ்கின்றவிவாதங்களை தாமேதீர்த்துக்கொள்ளச் சக்திபெற்றிருந்தால் அச்சமூகத்திலுள்ள சில பிரமுகர்களும், பிற சமூகத்திலுள்ள சிலரும் ஒன்றுசேர்ந்து அவர்களின்வழக்குகளை பஞ்சாயத்து சபை மூலம் தீர்த்துவைக்கவேண்டும். பஞ்சாயத்து சபைகளால் ஜனங்களின் ஒற்றுமை வளர்ச்சிபெறுமேயன்றி புதிய கற்பனைக்காரர்களால் விளைவிக்கப்படும் நியாயத்துக்கு மாறான சூழ்ச்சிகள் வுக்கமாட்டா. பஞ்சாயத்து சபைகள் கக்ஷிக்காரர்களின் வஞ்சனைகளை அவ்வப்போது கண்டித்தும், தண்டித்தும் நற்புத்தி போதிக்கும். இக்குணங்களை யறிந்துதான் முற்காலத்தில் நம்மவர்கள் பிற்கூறிய பஞ்சாயத்து சபைகளையே யனுஷ்டித்து மதமாச்சரியமில்லாமல், ஒற்றுமையுடன் வாழ்ந்துவந்தார்கள். தற்காலத்திலோ இதற்குமாறாக நடந்துவருகின்றனவென்பதை நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. ஆகையால் சமூக முன்னேற்றத்தையும், ஒற்றுமையையும் விரும்பும் நம் சமூகாபிமானிகள் சென்ற வாரத்தில் கூறியதுபோல ஜாதிப்பஞ்சாயத்து சபையை மீண்டும் உத்தாரணம் செய்வதில் பின்வாங்கமாட்டார்களென்று நம்புகிறேன்.

சுப்பிரமணியன்.

### கறுப்பு ஜாதியாரின் சுதந்தரவேழுச்சி. ஆப்பிரிக்காவில் குடியரசு.

கடந்த 30 தினங்களாக விவாதம் நடந்த பின்னர், அமெரிக்காவில் கூடியுள்ள ஸர்வதேச நீக்ரோ மகாநாட்டினர் ஒரு முக்கியமான தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கின்றனர். ஆப்பிரிக்கா கண்டம்பூராவும் கறுப்பு ஜாதியாராகிய நீக்ரோவர்களுடையதே என்றும், அதை ஒரு குடியரசாகச்செய்து நீக்ரோயர்களே அதன் பொருளாதார மூலத்தைத் தோண்டியெடுக்க உரிமை பெற்றவர்களென்றும், அத்தீர்மானத்தில் கண்டிருந்தது. மிஸ்டர் மார்கஸ் கார்வே என்பவர் தற்கால ஏற்பாடாய் ஆப்பிரிக்காக் குடியரசு நாட்டின் பிரஸிடெண்டாகத் தெரிந்தெடுக்கப்பட்டார். ஆடம்பரமாய் அவருக்கு உடுப்புகள் போட்டு, சம்பிரதாயப்படி பிரயாணஞ்செய்யச் சொன்னார்கள். மண்டபமெங்கும் கொடிகளாலும், தோரணங்களாலும வெகு சிங்காரமாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. சிவப்பும் கறுப்பும் கலந்த கொடிதான் புதிய குடியரசுக் கொடியாகுமாம். மகாநாடு கலைந்தபின், 2 மணி நேரம் நீக்ரோஜாதியார் நகரத்தைச் சுற்றி ஊர்வலஞ்செய்தனர். லண்டன் டைம்ஸ் பத்திரிகைக்கு வந்த தந்தியிலிருந்து இவ்விருத்தாந்தம் அறியப்படுகின்றது.

### தங்கொள்கைகளைப் பரவச் செய்ததற்காகத் தங்க நகைகளை விற்றல்.

போல்ஷிவிக்கர் ருஷ்யாவிலுள்ள நகைகளை யெல்லாம் கவர்ன்மெண்டின் சொத்தாகச் செய்து, அவைகளை விற்றுமுதல் செய்து கிடைப்பதைக்கொண்டு உலக முழுவதும் தங்கோக்கங்களைப் பிரசாரம் செய்ய உத்தேசித்திருப்பதாகவும், இது சம்பந்தமாக அமெரிக்காவிலும் ஜெர்மனி ஜப்பான் முதலிய இடங்களிலும் பல ஆபரணங்கள் விற்பனை செய்யப்பட்டுப் போய்விட்டதாகவும் வீட்டுக்குவீடு காவல் வைத்து நகைகள் கைப்பற்றப் படுவதாகவும்; ருஷ்யாவுக்குப் போயிருந்த பல பிரிட்டிஷார் போல்ஷிவிக்கர் நகைகளைப் பெற்று அவர்களுடைய கொள்கைகளையாதரிக்கத் தயாராகத் திரும்பியிருப்பதாகவும் அப்ஸர்வர் என்றபத்திரிகை கூறுகின்றது.

### 57 நாள் பட்டினிகிடந்த சந்திரநந்தி.

இப்பொழுது ஐயர்லாந்தில் 42 நாட்களாகப் பட்டினி கிடக்கின்ற லார்டு மேயர், இயற்கையில் மாம்சம் சாப்பிடுபவராயிருந்தும், அவர் தம் மனோதைரியத்தினால் இத்துணை பிடிவாதமாக விருப்பதைப்பற்றிப் பலரும் பலவகையாக வியந்து கூறுகின்றனர். முற்காலத்தில் நம் தென்னிந்தியாவில் வாழ்ந்துவந்த சந்திரநந்தி என்பவர் 57 நாட்கள், பட்டினியாக இருந்ததாய் ஒரு கன்னட பாஷைச் சாஸனங் கூறுதலால், மேற்படி சம்பவத்தில் ஒன்றும் அதிசயிப்பதற்கில்லை யெனத் தோன்றுகின்றது. ஆனால் இதனைக் குறித்து அமிர்தபஜார் பத்திரிகை கூறுவதைமாத்திரம் இங்கெடுத்துக் கூறுதல் பொருந்தும். அதாவது.—"இந்தியாவில் முற்காலத்திலே சில யோகீசுவரர்கள் இம்மாதிரி பட்டினி யிருந்திருக்கிறார்கள். என்பதும் ஓர் புறமிருக்க, இப்பொழுது இந்தியாவிலோ கோடிக்கணக்கான ஜனங்கள் பட்டினியாலும் பசியாலும வருந்திக்கொண்டிருக்கின்றனர். பட்டினி கிடக்கும் இரகசியத்தை லார்டு மேயர் இந்தியருக்கு உபதேசித்தால் இந் நெருக்கடியான நிலைமையில் அதுமிகுதியும்உபகாரமாயிருக்குமெனநினைக்கின்றோம்'

### அமெரிக்காவில் அயர்லாந்தியரின் பிரசாரம்.

அயர்லாந்துக்கு சுய ஆக்ஷியும், பூரணசுதந்தரமும் வாங்கித்தரும்பொருட்டு அமெரிக்காவில் பலமான கிளர்ச்சி நடந்துவருகிறது. 'டெய்லிஹெரால்டு' என்ற லண்டன் பத்திரிகையின் அமெரிக்க நிருபர் கூறும் வண்ணம் நியூயார்க் துறைமுகத்திலுள்ள பிரிட்டிஷ் கப்பல்களில் சாமான் ஏற்றவோ இறக்கவோ தொழிலாளர் மறுக்கின்றனராம். பிரிட்டிஷ் சாமான்களை பகிஷ்காரஞ் செய்வதற்கான ஏற்பாடுகளையும் அயர்லாந்தின் நண்பர்கள் அமெரிக்கா நெடுக்ச்செய்ய உத்தேசித்திருக்கின்றனர். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைத் தாக்கிப் பதினாயிரக்கணக்கான துண்டுப்பிரசுரங்கள் அமெரிக்காவில் விழக்கப்பட்டுவருகின்றன அயர்லாந்திலுள்ள பிரிட்டிஷ் துருப்புகளை இப்பொழுதே எடுத்துவிடும்படி கிரேட்பிரிட்டனுக்குச் சிபார்சு செய்தாலன்றி பிரிட்டிஷ்சாமான்களை க்கட்டாயம் பகிஷ்காரம் செய்வதாயும், கப்பல்களில் சாமான் ஏற்றமுடியாதென்றும், பலஸ்திரீகள் அன்னிய நாட்டு மந்திரியிடம் சொன்னதற்கு அவர் முடியாதென்று பதிலளித்துவிட்டாராம்.

### பட்டினிப் போராட்டத்தைப்பற்றி ஒரு இரகசிய வதந்தி

ஐயர்லாந்தில் மிஸ்டர் மாக்ஸ்வினி என்பவர் இன்னும் பட்டினிப்போராட்டம் செய்தேவருகின்றார், சிலர் அவர் இரகசியமாகப் போஷிக்கப்பட்டுவருகின்றார் என்று தவறாக சொல்வதால் இனி அவருடைய தேகஸ்திதியைப் பற்றி அறிக்கைகள் வெளியிடப்படமாட்டாவென்று அவருடைய பந்துக்கள் சொல்லிவிட்டார்களாம்.

### பிராஞ்சுப்பிரதம மந்திரி

மிஸ்டர் லேக்யூஸ் என்பவர் பிராஞ்சுப் பிரதம மந்திரியாக நியமிக்கப்பட்டிருக்கின்றனராம்.

### புதிய குடியரசுத் தலைவர்

பிரஞ்சுக் குடியரசுத் தலைவராக மிஸ்டர் மில்லராண்டு, தெரிந்தெடுக்கப்பட்டனர்.

### கட்டாயச் சட்டம் தயாரிக்கின்றதாம்

ஜெர்மன் அரசாங்கத்தார், 18-வது முதல் 25 வரையிலுள்ள எல்லா ஆண்மக்களும் இவ்வளவு காலம் நிலக்கரிச் சுரங்கம் முதலிய இடங்களில் கட்டாய சேவகம் செய்து தீரவேண்டுமெனக் கூறும் சட்டமொன்றைத் தயாரித்து வருகின்றனராம்,

### பகைவரின் கடன்.

ஜெர்மன் மந்திரிசபையில், பொக்கிஷ மந்திரியார் அவர்கள் ஜெர்மனிக்கிருக்கும் கடன் மொத்தம் 240700 மார்க்குகளாகுமெனக் கூறி யிருக்கின்றார்.

### 20 லக்ஷம் டன் நிலக்கரி.

ஜெர்மானியர், தமது சமாதான நிபந்தனையின்படி ஒப்படைக்கவேண்டிய 20 லக்ஷம் டன் நிலக்கரியையும் நேசதேசத்தாருக்கு ஒப்படைத்துவிட்டார்களாம்.

## புதுக்கோட்டை தர்பார் அறிக்கை.

ஹஜ் யாத்திரைக்காக பம்பாயில் தங்கியிருக்கும் யாத்திரிகைகளுள் காலரா கண்டுவிட்டது. அநேக ஆயிரம் பேர்கள் புறப்பட காத்துக் கொண்டிருக்கிறார்கள். இனி வருபவர்களுக்கு ஜாகையோ கிடையாது. இப்பொழுது அங்கு இருப்பவர்கள் கப்பலில் புறப்படுவதற்கே கொஞ்சம் தாமதமாகும், இனிவருபவர்கள் சரியான காலத்தில் ஹெட்ஜாஸ் போய் சேருவதென்பது அசாத்தியமான காரியம். ஆகையால் ஹஜ் யாத்திரை புறப்பட உத்தேசிக்கும் யாத்திரிகர்களுக்கெல்லாம், இவ்வருடம் காலதாமதமாய்விட்டபடியால், இனி அவரவர்கள் சவுகரியத்தை உத்தேசித்தே புறப்படாமலிருப்பது நலமென்று இதனுல் தெரியப்படுத்தலாயிற்று என, தர்பார் விசேஷப் பிரசுரமொன்று நமக்கு அனுப்பப்பட்டிருக்கிறது,

### யாக க்ஷத்திரியர்களின் 2-வது கான்பரன்ஸ் (காஞ்சீபுரம் 30-9-20)

24 கோத்திரத்தார்களாகிய சாது செட்டியார்களென்னும் யாகக்ஷத்திரியர் 2-வது கான்பரென்ஸ் காஞ்சீபுரத்தில் நாளிது அக்டோபர்மீ 30, 31௳ களில் நடைபெறப்போகிறது அக்குலத்தைச் சேர்ந்தயாவரும் தவிராது விஜயம் செய்யவேண்டும். முதல்கான்பரன்சில் முடிவுபெறாத விஷயங்களும், இக்கான்பரன்சில் தீர்மானிக்கப்பட வேண்டியிருப்பதாலும் இம்மகாநாடு நீடித்தகாலம் நிலைபெற்றுவர ஓர் பர்மனென்ட் கமிட்டி நியமிக்க வேண்டியிருப்பதாலும் மெம்பர்கள் தவறாது விஜயம் செய்ய வேண்டுமெனக் கோரப்படுகின்றார்கள்' கான்பரன்ஸ் பிரசிடெண்ட் விபரம், பைனல் நோட்டிஸ் மூலமாய் தெரிவிக்கப்படும் இதற்கு முன இக்கான்பரன்ஸ் சங்கதிகள் தெரியாத இக்குலத்தவர்கள், தங்கள் விலாசத்தை ஓய், எம் எஸ் அசோசியேஷனுக்கு தெரிவித்துக் கொள்ளவேண்டியது. இது மதராசில் கிடங்கு தெரு 33 ௵. கட்டிடத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது, என அதன் காரியதரிசி நமக்கறிவிக்கிறார்.

## சந்தாநேயர்களுக்கு அறிவிப்பு.

நமது மித்திரன் சந்தாதாரர்கள் பணம் அனுப்பும் பொழுதும்,கடிதங்கள் எழுதும்பொழுதும் பத்திரிகையின் ராப்பரில் (மேற்சுற்றுத்தாளில்) குறித்திருக்கும் சந்தா நெம்பரை குறிப்பிட்டு எழுதினல்தான் தாமதமின்றிகவனித்து பதிலெழுத சௌகரிய மாயிருக்குமென்பதை அன்போடு தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

மானேஜர்.

**SAHASRAPUTA ABHRAK BHASMA.**

**ஸஹஸ்ரபுட அப்ரேக் பஸ்மம்.**

இவ்விலையில்லா மாணிக்கம் போன்ற பஸ்மத்தைக் கொஞ்சகாலம் ஒரு மனிதன் உபயோகித்து வருவானேயாகில் அவன் மூப்பென்பதே யில்லாமல் நித்தியவாலிபத்துடனிருப்பான். இவனுடைய தேகம் வஜ்ர சரீரமாகிவிடும். ஆதலால் இவ்வளவு அபார சக்தியுள்ள இம்மருந்து இரத்த சோகை, பாண்டு, நீரழிவு, நபும்ஸகத்வம், ராட்பட்ட க்ஷயம் வெள்ளை குஷ்டம் முதலிய கொடிய வியாதிகளை நாசஞ் செய்துவிடுமென்று சொல்வது மிகையாகும் இப்பஸ்மம் கால் தோலாவுக்குக் குறைந்து அனுப்புவதில்லை. 1 தோலா பஸ்மம் ரூ 50.

இன்னும் விவரம் வேண்டுவோர் எங்கள் புதிய கியாட்லாக்கை வாங்கி வாசியுங்கள். வைத்திய சாஸ்திரி.

**மணிசங்கர் கோவிந்தஜீ,**
ஆதங்கநிக்ரஹ ஔஷதாலயம்,

---

**உங்களுக்கு ரிபேர்செய்யத் தெரியுமா?**

**எதை?**

**மானிடகடியாரத்தை ரிபேர்:**

செய்யத் தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற அவாவுள்ள ஒவ்வொரு புருஷனும் ஸ்திரீயும் நம்முடைய,

**வைத்திய வித்தியா.**

என்னும் புத்தகத்தை இரண்டொரு முறை கவனமாய் வாசித்துவந்தால் மானிட கடியாரமென்கிற சரீரத்திலுண்டாகும் எவ்வித வியாதிகளைத் தடுக்கவும் தீர்க்கவும் கூடும். விலையுமில்லை. தபாற்செலவுமில்லை.

ராஜவைத்திய நாராயணஜீ கேசவ்ஜீ,
27 சினுபஜார், மதராஸ்

---

**தவறுதீர்கள்! இதுசமயம்! தவறுதீர்கள் உங்களுங்கள் அதிருஷ்டத்தைப் பரீக்ஷித்துப் பாருங்கள்-**

(1) ஜாதகத்தை அனுப்புங்கள். இல்லாவிடில் ஜனனவருஷம் மாசம் தேதி நாழிகை என்னும் இவைகளை அனுப்புங்கள். இல்லாவிடில் இதுபூர்த்தவுடன் இதனடியிற் குறித்துள்ளவைகளில் எந்தப்பாகம் வேண்டுமோ அந்தப்பாகம் வரைந்தனுப்பினால் இன்னின்ன காலத்தில் இன்ன வயதுக்குள் இன்னவை கிட்டும் கிட்டாதெனவும் கடிதம் கிடைத்த நேரத்தைக் கொண்டு இன்னவித முடிவு பெறுமென்று சண்முகநாதன் திருவருளால் வரைந்தனுப்புவோம்.

(2) 1 ஆயுட்பாகம், 2 எந்தவித த்தினால் தனங்கிடைக்கும், 3 கல்யாணம் சொந்தமா, 4 களத்திரபாக்யத்தனை, 5 அது முன்னு பின்னு, 6 புத்திரனுண்டா 7 தனம் வைத்துப் போவேனு, 8 மரணமாகுமிடம் சுயதேசமா 9 சொந்தவீடு நிலம்கிட்டுமா 10 கடன் எப்போது நிவர்த்தியாகும். 11 விவகாரம் ஜெயமாகுமா, 12 நினைத்த காரியம் முடியுமா.

தனி ஒருபாகம் சார்ஜ் ரூ 1.
முழுத்தொகையும் அனுப்பவேண்டும் 12 பாகம் சார்ஜ் ரூ 5.

பாதி சார்ஜ் முற்பணமாக அனுப்புவோர்க்கு வி. பி. போஸ்டில் அனுப்புவோம்.

விபரந்தெரிய விரும்புவோர் விலாசம் எழுதினால் ஜோதிஷ, வைத்திய "கியாட்லாக்" இனாமாக அனுப்புவோம்.

வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

K. V. கோவிந்தசாமிநாயுடு,
ஜோதிஷம், வைத்தியம்,
மேலச் சித்திரவீதி,
மதுரை.

---

# விளம்பரம் செய்வோர்களுக்கு அறிவிப்பு.

**உள்நாடுகளிலும் வெளிநாடுகளிலும் லக்ஷாதிபதிகளான பிரபுக்களின் மத்தியில் உலவும் இப்பத்திரிகையில் தங்கள் விளம்பரங்களைப் பிரசுரிப்பீர்களாயின் தக்க லாபம் அடைவீர்கள்.**

---

பெரிய கம்பெனி!　　பெரிய கம்பெனி!!　　பெரிய கம்பெனி!!!

## பட்டு பீதாம்பர கம்பெனி, காசி.

**திருப்தியில்லாத சரக்குகளை திரும்பப் பெற்றுக் கொள்ளப்படும்.**

கீழே கண்ட சேலைதினுசுகள் தற்கால நாகரீகத்திற்கேற்றபடி நூதனமாகப் பலகலர்களில் 12, 16, 18 முழங்களில் தயாரிக்கப்பட்டது:

**புதிய தினுசுகள்!　　சுத்தமான பட்டு!!　　சகாயமான விலை!!!**

பட்டுபீதாம்பர சேலைகள், துப்பட்டாக்கள், தாவணிகள், வெண்பட்டு வேஷ்டிகள், சவுக்கங்கள், கெண்டைத் தலைப்பட்டுகள், பணமுடிப்புத்துண்டுகள், விஷ்ணு பாதத்தட்டுகள், பூணூல்கள், ருத்திராக்ஷங்கள், ஜபமாலைகள் முதலியன மிகவும் சகாயமான விலைக்குக் கிடைக்கும்.

"பட்டு பீதாம்பர கேட்லாக் இனாம்"

**ருத்திராக்ஷங்கள்!　　ருத்திராக்ஷங்கள்!　　ருத்திராக்ஷங்கள்!**

ஏறுமுகக்கண்டிகள், 32 மணிகளடங்கிய கண்டி 1க்கு ரூ. 100 முதல் 200, 300, 400, 500, 600, 700, 800, 900, 1000 வரை.
5, 6, முகக்கண்டிகள் 32 மணிகளடங்கிய கண்டி 1க்கு ரூபாய் 3 முதல 5, 8, 10, 15, 20, 25, 35, 50, 70, 80, 100. வரை:

**ஏறுமுகத்தனிமணிகள்.**

5முதல் 16 முகங்கள் வரை, ஈன்முப் பழுத்தமணிகளாகக் கிடைக்கும் மணி 1க்கு ரூ 5, 10, 15, 20 30, 50, 100 வரை. வேண்டியவைகளுக்கு உடனே எழுதவும்.

விலாசம்:—
மானேஜர் பட்டுபீதாம்பர கம்பெனி, காசி.
MANAGER
SILK PITAMBER COMPANY, BENARES CITY.

இந்தப் பத்திரிகையின் பெயரைக்கண்டு எழுதுகிறவர்களுக்கு ரூபா 100க்கு ரூபா 5 விதம் கமிஷன் கொடுக்கப்படும்.

---

**இங்கிலீஷ் கற்கவேண்டுமா?**

**PATRON.—**
சென்னை ஐக்கோர்ட்டு ஜட்ஜி.
ஆனரபிள் ஸதாசிவய்யரவர்கள்.

இதுவரைக்கேளாத புதியமுறை! எளிதில் எவரும் கற்கவெகுஇனிய முறை! மாதம் ரூபாய் ஒன்றே செலவு! எத்தொழிலாளரும் எங்கிருந்தும் கற்கலாம்! தமிழோ மலையாளமோ சிறிது தெரிந்தாற் போதும்! மாதம் 4-புத்தகங்களாக ஒரே வருஷம் படித்தால் பயனடையலாம். விவரங்களை ஓரணு ஸ்டாம்புடனெழுதினால் பெறலாம். சேர்க்கை பீஸ் அணா 4. முன்னனுப்பினால் 1-முதல் 4-புஸ்தகங்கள் அப்ளிகேஷன் பாரத்துடன் ரூ 1-2-0 க்கு வி. பி. யில் அனுப்பப்படும்.

ஆர். அச்சுதன் தம்பி,
புரொப்ரைட்டர்,
இங்கிலீஷ் காரஸ்பாண்டன்ஸ், ஸ்கூல்
திருவனந்தபுரம்.

---

**தபால் தந்திமித்திரன்.**

நம்மவர்களுக்கு மிகவும் உபயோகமுள்ள புத்தகம். இதில் இந்தியா, பர்மா, சிங்கப்பூர், சிலோன் முதலிய இடங்களிலுள்ள தபால் தந்தி ஆபீசுகளினுடைய பெயர் விளக்கமும், தபால் தந்தி சட்டங்களும். வியாபார சம்பந்தமான முக்கியக்குறிப்புகள், சுயமாகவும், சுலபமாகவும் தந்திகள் எழுதும் மாதிரிகள், நடப்புவட்டி, தவணைவட்டி விவரங்கள் முதலியனவும் அடங்கியுள்ளன. ஸ்ரீ முருகக்கடவுளுடைய அழகிய திருவுருவப்படமும் இதில் உண்டு. இப்புத்தகம் ஒவ்வொரு நகரவைசியரிடமும் இருக்கவேண்டியது. காப்பி 1க்கு விலை ரூ 2-0-0

வி. பி. சார்ஜ் பிரத்யேகம்.

வைசியநேசன் கம்பெனி
தபால் பெட்டி நிர் 251
57 மெர்ச்செண்ட் வீதி,
இரங்கோன்.

---

ராஜாக்கள், ஜமீந்தார்கள், மிராசுதார்கள் உத்தியோகஸ்தர்கள், ஸர்ஜன்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள். இன்னும் அநேகதனவான்களால் பிரதிதினம் உபயோகித்து, கைதேர்ந்ததன்று நன்கு மதித்து ஏற்றுக் கொள்ளப்பெற்றதும், புகழ் வாய்ந்ததும்

**பிரசித்திப்பெற்று வருவதுமான,**

## நாராயணன்ஸ் பல்பொடி.

(ரிஜிஸ்டர்ட்)

25-வருஷத்துக்கதிகமாய் ஜக்கும்கியாதிபெற்று, பல்வலி, ஈறுவீங்குதல், பல் கூச்சம், ரத்தம் வருதல், வாய்துர்நாற்றம் இவைகளைப்போக்கி பல்லுக்கு முத்துப்போல் ஒளியைக்கொடுக்கும். ஒரு தடவை உபயோகித்துப் பார்த்தால் வேறே எந்தப்பொடியையும் உபயோகிக்க மனம் நாடாது.

விலையின் விவரம்.

டப்பா 1, ரூ 0-4-0, டஜன் ரூ 2-12-0 1 குரோஸ் அல்லது 12 டஜன் விலை ரூ32-0-0 போஸ்டு செலவு பிரத்தியேகம். நாராயண்ஸ் தாளிசபத்திரிவடகம் (பித்தவாய்வுக்கு) பாக்ஸ் 1-0-0. நாராயண்ஸ்தாளிசபத்திரி பில்ஸ் 30 ஷை 0-8-0. நாராயண்ஸ் குந்தளவர்த்தனி ஹேர் ஆயில் 3அவுன்ஸ் 0-12-0. நாராயண்ஸ் சந்தனாதித்தைலம் 16 அவுன்ஸ் 3-8-0. நாராயண்ஸ் பாவன மிளகு (குன்மமுதலியவைக்கு) 1 தோலா 0-8-0. நாராயண்ஸ் இஞ்சி மூரப்பா (அரோசிகங்களுக்கு 2 அவுன்ஸ் 0-8-0 நாராயண்ஸ் தாதுவிருத்தி லேகியம் (வெட்டைக்கு) சேர் 3-8-0. நாராயண்ஸ் உப்புஉருண்டை ௱, (அஜீரணத்துக்கு) 0-8-0.

நேடிவ் டாக்டர், S. நாராயண ராவ்,
கோபாலகோத்தன் தெரு. மதுரை.

---

**'ஆனந்தபோதினி.'** ஆரும் வருடம்.

மாதச் சஞ்சிகையை விரும்பும் நம் தமிழ்நண்பர்களுக்கு 'ஆனந்தபோதினி'யைவிடச் சிறந்த சஞ்சிகை கிடையாது. 'ஆனந்தபோதினி' தமிழ் நாட்டில் தலைமைபெற்று யாவராலும் விரும்பப்படுவது தமிழ் நாட்டிலிந்ததே; இது சிறந்த விஷயம் குறைந்த சந்தாஉடையது பல்லாயிரம் சந்தாதாரர்கள் இப்பத்திரிகையை வாசித்துப் பயன் பெறுகிறார்கள். இதன் பெருமையைப்பற்றி ஆயிரக்கணக்கான நற்சாட்சிப்பத்திரங்கள் வந்துகொண்டிருக்கின்றன. ஆடிமுதல் இப்பத்திரிகைக்கு ஆறுவதாவது பிறந்துவிட்டது, நீங்களும் இப்பத்திரிகைக்குச் சந்தாதாராக வேண்டியது அவசியம். மாதிரி சஞ்சிகை இனாம்.

வருடசந்தா தபால்கூலி யுள்பட, இந்தியா, பர்மா சிலோனுக்கு ரூ 1 0 0
பினாங்கு, சிங்கப்பூர், செட்டால் முதலிய வெளிநாடுகளுக்கு ரூ 1 4 0

விலாசம்:—"ஆனந்த போதினி" ஆபீஸ்.
கெ, 6, வெங்கடேச மேஸ்திரி தெரு மதறாஸ்.

---

நூதனம்!　　வாசனைக்கு ராஜா　　நூதனம்!

## ஓடோ டில்பகார்

(ரிஜிஸ்டர்ட்)

சுகமான சுவாசனையும், நீடித்திருக்கக்கூடியதும், அதிக நெடியில்லாததும் இப்பிரதேசங்களில் அதிசமாய் பிரபலப்படுத்தி ஆனந்தமடைந்திருக்கின்றதும் கீர்த்தி பெற்றிருப்பதுமான ஓட்டோடில்பஹார்

இதில் ஸ்பிரிட் அல்லது சாராயம் கலப்பில்லை ஆனால் இது ஆயிரம் புஷ்பங்களின் சத்து. ஓட்டோ டில்பஹாரை உபயோகித்து நீடித்தவாசனையுள்ள இதன் ராஜமிக்கைத் தெரிந்து கொள்ளுங்கள்.

| | ரூ. அ. பை | அ. வி. பி சார்ஜ் |
|---|---|---|
| டிராம் பாட்டில் | 0 8 0 | 0 4 0 |
| 1 டிராம் பாட்டில் | 0 12 0 | 0 4 0 |
| 2 டிராம் பாட்டில் | 1 4 0 | 0 4 0 |
| ,, பெரிது | 2 0 0 | 0 4 0 |
| ,, வாசனையேற்றப்பட்ட கார்டு 1-க்கு | 0 1 0 | |
| ,, ஷை சாம்பிள் பாட்டில் 1-க்கு | 0 2 0 | |

குறிப்பு:—வாங்கும்போது "ஓட்டோ டில்பகார்" என்னும் பெயரைக்கவனித்துப் பாருங்கள்.

தென்னிலாகா ஏஜண்டுகள்:— சம்பத்அண்டு கம்பெனி,
சைனு பஜார்ரோட், தெப்பக்குளம், திருச்சி.
பேடண்டு மருந்துகள், வாசனை தைலங்கள், செண்டுகள் முதலியவைவிற்பவர்கள்.

Printed and Published by S. T Ramanathan Chettiar at the "Vysiamitran" Branch, Press, Karaikudi

